


# மூகாம்பிகையே!

# முழுநிலவே!

கவிஞர் இளந்தேவன்

# மூகாம்பிகையே!
# முழுநிலவே!

கவிஞர் இளந்தேவன்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# சமர்ப்பணம்

பூக்களுக்குப் புன்னகையைக் கற்பிக்கும்
பொன்மனச் செம்மல்,
புரட்சித் தலைவர்
சத்துணவு தருகிற
சரித்திர நாயகர்,
டாக்டர் எம். ஜி. ஆர்.
அவர்களுக்கு

# பதிப்புரை

திக்குத் தெரியாமல் திண்டாடுபவர்களுக்குத் தென் கன்னடத்தில் ஒரு தேவதை இருக்கிறாள்; அவள்தான் அன்னை மூகாம்பிகை. அவள் முச்சக்தி படைத்த முச்சுடர். அவளே கலைமகள். அவளே திருமகள். அவளே மாகாளி யாக மூன்று வடிவில் கொல்லூரில் கோலம் கொண்டு அகிலம் போற்றும் அன்னையாக ஒரே அம்சமாக, முழுநில வாகத் திகழ்கிறாள் என்று தன் கவிப் புலமையால் காவியம் பாடி நம்மையெல்லாம் கடைத்தேற்ற வைக்கிறார் கவிஞர் இளந்தேவன்.

பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலிக்க வந்த கவிஞர்கள் பலர் இருப்பினும் சிந்தனையாற்றலுடன் சிறப்பாகக் கவிபாடி, தம் கற்பனை வளத்தாலும், காவிய நயத்தாலும் சொல்லோவியத்தாலும், உவமை அணியா லும் ஓசை நயத்தாலும் உலகோர் உய்யும்வண்ணம் நல்ல நோக்கோடு உயர்ந்த கவிபடைப்பவர் கவிஞர் இளந்தேவன் என்பதை இந்த 'மூகாம்பிகையே முழுநிலவே' எனும் நூலைப் படித்தால் உணருவீர்கள்.

இக் காவியம் படைத்த கவிஞர் இளந்தேவன் முழு நிலவைக் கண்ட முதல் மனிதனாகக் காட்சியளிக்கிறார். இக் காவிய நாயகி சக்தித்தாயை அவர் முதலில் தரிசித்து தெள்ளு தமிழாலே நாமெல்லாம் நன்கு தரிசிக்க அள்ளித் தந்திருக்கிறார் தேன் தமிழ்க் கவிதைகளை.

சொற்செல்வமும் பொருட் செல்வமும், அருட் செல்வமும் நிரம்பப் பெற்றது 'மூகாம்பிகையே முழுநிலவே' எனும் இந்த நூல். இதுஎவ்வளவு சக்தி படைத்தது என்பதை நீங்கள் இந்த நூலைப் படித்தால் உணருவீர்கள்.

இந்நூலிலே தாய் மூகாம்பிகையின் பல வடிவங்களைக் காட்டுகிறார். அன்னையின் அற்புதங்களைக் கூறுகிறார். அவள் மகிமைகளை அணி அணியாகக் கூறுகிறார். கோலங்கள் பல கொண்டாலும் ஒரே அம்சம் கொண்ட மாபெரும் சக்தி அவள் என்பதை தம் சந்தத் தமிழால் நிரூபிக்கிறார் கவிஞர் இளந்தேவன்.

இளந்தேவனின் சுந்தரத் தமிழ் நம்மை மூகாம்பிகையின் பால் பக்தி கொள்ளச் செய்கிறது. அவள் அருளை நாடச் செய்கிறது.

பாட்டுத் தமிழால் அன்னை மூகாம்பிகையோடு மக்களை ஐக்கியப்படுத்துகிற முச்சக்தி படைத்த இந்த நூலை இப்பொழுது இரண்டாவது பதிப்பாக வானதி பதிப்பகத்தில் வெளியிட கவிஞர் இளந்தேவன் மனமுவந்து அளித்துள்ளார். இது வானதி செய்த பாக்கியம். சதாசர்வ காலமும் அன்னை—அன்னை எனத் துதிக்கும் என்னை இந் நூலைப் பதிப்பிக்கும்படி பணித்த கவிஞர் இளந்தேவன் பண்புள்ளத்தைப் பாராட்டுகிறேன். போற்றுகிறேன்.

மக்களையெல்லாம் அன்னையோடு இணைக்கிற பாலமாகத் திகழ்கிறவர் செந்தமிழ்க் கவிஞர் இளந்தேவன் அவர்கள். அவர் படைத்த மகாசக்தியாகிய 'மூகாம்பிகையே முழுநிலவே' எனும் இந்த நூலைப் படித்து அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகுங்கள்.

**ஏ. திருநாவுக்கரசு**
வானதி பதிப்பகம்.

# மீண்டும் முழுநிலா

நான் என் சக்திக்கியன்றவாறு சக்தியைப் பாடிய காப்பியமே! 'மூகாம்பிகையே! முழுநிலவே!' என்னும் பனுவல். எங்கள் 15ஆம் மணநாளாகிய 8-11-1987 அன்று நூல் ஒன்று கொண்டு வரலாம் என நானும் என் துணைவியாரும் தீர்மானித்தோம். புதிய நூல் கொண்டுவர வேண்டுமெனில், இருக்கும் கவிதைகளைத் தொகுக்க வேண்டும். எப்போதும் கனவு கண்டு கொண்டிருக்கும் என்னாலே உடனே ஆயத்தமாக முடியுமா? முடியவில்லை! எனவே, ''இரண்டாம் பதிப்பாக 'மூகாம்பிகையே முழுநிலவே' என்னும் காப்பியத்தைக் கொண்டுவாருங்கள்'' என்றார் என் வாழ்க்கைத் துணைவியார்.

முதற் பதிப்பை வெளியிட்டவர் வரலாற்றை உருவாக்கும் எனது உடன்பிறப்பு, வார்த்தைச் சித்தர் வலம்புரிஜான் அவர்கள். இரண்டாம் பதிப்பைக் கொண்டுவந்திருப்பவர் மணிவிழா நாயகர் சாதனைச் சரித்திரம் வானதி திருநாவுக்கரசு செட்டியார் அவர்கள். இந்த இரு பெரு மக்களிடமும் ஒப்புதல் வேண்டியிருந்தது. முயன்றேன்; பெற்றேன். இதற்கு எவ்வளவு காலம் பிடித்தது? இரண்டு நிமிடம்? எப்படி? இருமுறை தொலைபேசி எண்களைச் சுழற்றி! இந்தப் பெருமக்கள் எவ்வளவு உயர்ந்தவர்கள் என்பதற்கு இந்த இரு நிமிடங்களே சாட்சி!

நான் வாழுங் காலத்தில், அரசியல், கலை, இலக்கியம், ஆன்மீகம், நிர்வாகம் இப்படி ஐந்து துறைகளில் முத்திரை பதித்துவரும் ஒரு பெரியார் இருக்கிறார். அவர் பெயர் ஆர். எம். வீ. அவரைப்போலத் தெளிவாகக் கருத்துக்களை மக்கள் மன்றில் வைப்பவர்களை நான் கண்டதில்லை. ஆர். எம். வீ. அறிஞர்; ஆற்றல் மிக்கவர்; ஆண்மை மிக்க சிந்தனைகளின் ஊற்றுக்கண்; இற்றைநாள் நக்கீரர்.

இவரால் பாராட்டப்படுவது, காலம் தன் கையாலேயே நமக்குக் கனக மணியாரம் சூட்டுவது போல. இவரது பேச்சில் அந்தப் பரிசைப் பெற்றிருக்கிற நான் எழுத்திலும் பெற்றுவிட விரும்பினேன். எனவே அணிந்துரை கேட்டேன்; அறவாணர் ஆர். எம். வீ. வழங்கினார். இந்த இரண்டாம் பதிப்புக்கு இதுவே மகுடமாகிறது.

'இளைய அண்ணா' என்று இளைஞர் உலகம் போற்றுகிற வலம்புரிஜான் அவர்களே இந்தக் காப்பியம் எழக் காரணமானவர். வானவரும் தமிழ் நூல்கள் வாங்க வருகின்ற தீனதயாளு தெருவிலுள்ள வானதி பதிப்பகத்தின் உரிமையாளர் திருநாவுக்கரசு செட்டியார் அவர்கள், கண்ணதாசனின் கவித்துவத்துக்கு அடுத்தபடியாக எனது கவித்துவத்தைக் காதலிக்கிறவர். இந்த இரு பெருமக்களுக்கும், அணிந்துரை வழங்கிய அருளாளர் அவர்களுக்கும் கவிதையை எப்படிச் சுவைப்பது என்பதைக் கற்பிக்க வாழ்ந்துகொண்டிருக்கும் கம்பன் கவிநயச் செல்வர் திரு. நல்லபெருமாள் அவர்களுக்கும், இந்தப் பனுவலில் வருகிற ஊழிக்கூத்து என்னும் கவிதை பாரதியின் 'ஊழிக் கூத்தை' உரசிப் பார்க்கிறது என்ற உண்மையைக்கூறி என்னை ஊக்கப்படுத்திய பாரதி கலைக் கழகத் தலைவர் திரு. இரா. சுராஜ் அவர்களுக்கும், கொல்லூரில் முதற் பதிப்பை வெளியிட்டுச் சென்னை வந்தவுடன், இராசா அண்ணாமலைபுரத்தில் விழா எடுத்து என்னைச் சிறப்பித்த சகோதரர்கள் திருவாளர்கள் தமிழ்மாறன், பழநிவேலு இருவர்க்கும், என்னுள் நானாக விளங்கும் எனதருமைக் கவிதைச் சுவைஞர்க்கும், இப் பதிப்பைச் சிறப்புறக் கொணரும் பணியில் உதவிய அனைவர்க்கும் என் நன்றி.

இன்ப அன்புடன்,
**இளந்தேவன்**

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற சித்தர்

# ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகளின்

# அருளுரை

"மின்னாயிரமொரு மெய் வடிவாகி விளங்குகின்றது" என்று லோகமாதாவை அபிராமி பட்டர் பாடுகிறார். கோடி சூரிய பிரகாசத்தோடு, சூரிய மண்டலத்திலிருந்து அருளாட்சி நடத்தும் ஸ்ரீ காயத்ரி மாதாவின், அர்ச்சாவ தாரக் கோலங்களிலே, கொல்லூர் மூகாம்பிகை அம்மன், மிகவும் விசேஷமானது. முக்திப்பிரதாயினியாய், தியானிப் பவரின் மனதில் முழுநிலவாய் இருப்பவளே அன்னை மூகாம்பிகை. லக்ஷ்மி, சரஸ்வதி, சக்தி ஆகிய மூன்று நிலை களும் இணைந்த ஒரே அம்சமாக அவள் இங்கு விளங்குவது மிகச் சிறப்பு. பூர்வ புண்ணியம் செய்தவர்களால்தான் இவளைத் தரிசிக்கும் பேறு பெற இயலும். வேண்டுவோர்க்கு வேண்டுவதை நல்கும் பேரருட் சக்தியான இவள் புகழை— கவிஞர் இளந்தேவன் "மூகாம்பிகையே,முழுநிலவே!" என்ற தலைப்பில் காவியமாக்கி அவள் சன்னதியிலேயே அதை வெளியிடுவதும், நாம் அனைவரும் செய்த பாக்கியமே! தாயைப் பற்றிய நூலை, தாயின் ஆசிரியர் திரு. வலம்புரி ஜான் வெளியிடுகிறார். இதுவும் பொருத்தமே! தேவி பராசக்தி, நூலை இயற்றிய கவிஞரையும் நூலைப் பக்தி யுடன் பாராயணம் செய்பவரையும் அருள் பாலிப்பாள் என்பதில் சந்தேகமில்லை!

கவிஞர் இளந்தேவன், இதுபோன்ற பல பக்தி நூல்களை இயற்றி, அன்னையின் அருளுக்குப் பாத்திரராக வேண்டும் என்று காயத்ரி தேவியைச் சிந்தித்து, ஆசீர்வதிக் கிறோம்.

சென்னை-1
13-1-83

ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகள்

## அறிவாணர்

## மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள்

## வழங்கிய

# அணிந்துரை

கவிஞர் இளந்தேவன் தமிழுக்குக் காலம் வழங்கியிருக்கிற கொடை...இந்த நூற்றாண்டில் மகாகவி பாரதியார், பாவேந்தர் பாரதிதாசன் போன்ற கவிஞர்களைத் தமிழ் மொழி பெற்றுச் சிறப்புப் பெற்றுக்கொண்டிருக்கிறது... காலம் காலமாகத் தமிழ் மொழியை வாழ்வித்துக் கொண்டிருப்பவர்கள், ஆற்றல்மிக்க நமது கவிஞர் பெருமக்கள் தான்,

பொதுவாக, பேச்சாளரையோ எழுத்தாளரையோ பெயருக்கு முன்னால் பேச்சாளர் அல்லது எழுத்தாளர் என்று சிறப்பாகச் சேர்த்துச் சொல்வதில்லை. கவிஞர்களைத்தான் பெயரோடு சேர்த்துப் பெருமையோடு அழைக்கிறோம். ஏனெனில், கவிதைதான் மூன்று தமிழோடும் கலந்து நிற்கிறது. இயலாக, இசையாக, நாடகமாகத் தமிழ் சிறப்புப் பெறுவதற்குக் கவிதைகள் தான் துணை நிற்கின்றன.

எனவேதான் கவிதைகளைப் படைத்த கவிஞர்கள், காலம் காலமாகத் தமிழ் உலகில் சிறந்து விளங்குகிறார்கள். அத்தகைய கவிஞர்களில், வாழுகின்ற கவிஞராக என்றும் வாழும் கவிஞராக விளங்குபவர் இளந்தேவன். கவிஞர்கள் பிறரால் உருவாக்கப்படுவதில்லை... இயற்கையால் படைக்கப்படுபவர்கள்; காலத்தால் காப்பாற்றப்படுபவர்கள்; அதனால்தான் என்றும் இறவாத புகழோடு விளங்குகிறார்கள்..

அப்படிப்பட்ட அற்புதக் கவிஞர்களில் ஒருவரான இளந்தேவன் 'மூகாம்பிகையே, முழுநிலவே' என்ற கவிதை நூலை நமக்கு வழங்கியிருக்கிறார்.

கவிஞர் இளந்தேவன் தமிழன்னைக்கு அணிவித்த ஆரங்களாகப் பல கவிதை நூற்களை வழங்கியுள்ளார் என்றாலும் இந்த நூலைப் படைத்ததன் மூலம் இன்றைய தமிழ்ச் சமுதாயத்திற்குத் தேவையான ஓர் ஆக்கப்பணியை நிறைவேற்றிய பெருமையை அவர் பெற்றிருக்கிறார்.

இந்த நூலில் 'தேடல்' என்ற பகுதியில், அவரே

'பக்தி வழியென்றும் பகுத்தறிவுப் பாதையென்றும்
எதைப்பற்றிப் பேசுகிறோம் என்பதே தெரியாமல்
வாதச் சுழல்களிலே வதைபட்டுச் சாகின்ற
வண்டு மனிதர்கள் வார்த்தை இயந்திரங்கள்...
மூலப் பொருளுண்டோ! முடிவதற்குக் கிடையாதோ!
நாயகன் கைக்கயிற்றில் நானுமொரு பம்பரமோ!
இப்படி நான் சிந்தித்தால், இதன்பெயர்தான் ஆத்தீகம்!
'கடவுளே! உனைப்படைத்த கடவுள் யார்?
கல்லையெலாம்
கல்லால் அடிப்பேன் ஆகையினால் நான் மேதை!
இப்படி நான் கர்ச்சித்தால் இதற்குப்பேர் நாத்தீகம்!
சிந்திக்கச் சிந்திக்கச் சிக்கல் பெரிதாகும்
சிந்தனைக்கு முடிவில்லை சிக்கலற வழியில்லை!
எதுதொடக்கம்? எதுமுடிவு? எதுவாழ்க்கை?
எதுகுறிக்கோள்?
எதுபாதை? எதுநன்மை? எதுதீமை? எதுவுண்மை?...,.......

என்னும் கவிதை வரிகளால் தான் குழம்பிய செய்தியை நமக்குத் தெரிவிக்கிறார். இந்தக் குழப்பம் அவருக்கு மட்டுமல்ல...இன்றைய இளைஞர்கட்கு, குறிப்பாக புதுக் கவிதை படைக்கும் இலக்கிய வாதிகளுக்கு நிறைய ஏற்பட்டிருக்கிறது. ஆகவேதான் இந்தக் கவிதை நூல் ஓர் 'ஆக்கப்பணி' என்று குறிப்பிட்டேன்.

'இந்தக் கவிதை நூலை இரண்டாவது பதிப்பாக அருமை நண்பர் வானதி திருநாவுக்கரசு வெளியிடுகிறார்.

பதிப்புத் துறையில் தமிழகத்தில் மாபெரும் சாதனையைப் படைத்துக் கொண்டிருப்பவர் வானதி...தமிழ்ச் சமுதாயத் திற்குப் பயனுள்ள வகையில் பதிப்புத் துறையைப் பயன் படுத்தும் பண்பாளர் மணிவிழாக்கண்ட வானதி அவர்கள்... இந்த அருமையான இலக்கியப் படைப்பைப் பதிப்பிப்பதன் மூலம் வானதி அவர்கள் மேலும் சிறப்பைப் பெறுகிறார்கள்.

நக்கீரர் பாடியுள்ள திருமுருகாற்றுப்படையைப் போல ஒரு மூகாம்பிகை ஆற்றுப்படை நூலாகத் திகழ்கிறது இந்நூல்...

**"சங்கினைக் கண்டேன் காக்கும்**
**சக்கரம் கண்டேன் அஞ்சேல்**
**என்கிற தாமரைக் கை**
**எழிலினைக் கண்டேன். தேவன்**
**சங்கரன் கண்ட வாறே**
**சாந்தமும் கண்டேன். அம்மா**
**திங்களும் கயலும் கண்டேன்**
**திருநுதல் விழியும் கண்டேன்."**

என்று முழுநிலவாம் மூகாம்பிகையைக் கண்ட கவிஞர் "கோலபுரத் தாய்வீடு, கோகர்ணம் பக்கத்தில்" என்று அன்னை குடியிருக்கும் திருக்கோயிலின் இருப்பிடத்தையும் நமக்குக் காட்டி நம்மையெல்லாம் அன்னையைக் கண்டு வழிபட ஆற்றுப்படுத்துகிறார். ஆகவேதான் இந்நூலை மூகாம்பிகை ஆற்றுப்படை நூலாக நான் கருதுகிறேன்.

கவிஞர்கள் கவிதையின் வடிவத்தை வரையறுத்துக் கொண்டு கவிதைகள் எழுத முயல்வதில்லை. கவிஞர்களை ஆளும் உணர்ச்சிகளே அவற்றின் கவிதை வடிவங்களைத் தாமே படைத்துக்கொண்டு விடுகின்றன. அவ்வகையில் கவிஞர் இளந்தேவன் அவர்களும் தம்மை ஆட்கொண்ட உணர்ச்சிகளுக்குத் தக்க வடிவங்களைத் தந்து சில கவிதை களைப் புதுக்கவிதைகளாகவும், சில கவிதைகளைச் சந்தக் கவிதைகளாகவும், சில கவிதைகளை இன்னிசைப் பாடல்

களாகவும் கொடுத்திருக்கிறார். ஆகவே இந்நூலைப் பயில்பவருக்கு வடிவத்தைப் பற்றிய சிந்தனை ஏற்படுவ தில்லை. கவிதை உணர்வைப் பற்றிய நிறைவே உண்டா கிறது.

சிறந்த கவிதைகளைப் படைக்கிற கவிஞர்களை நான் முகனோடு ஒப்பிட்டு நான்முகனைக் காட்டிலும் மேலான வர்களாக அவர்களை வியப்பதுண்டு. குமரகுருபரர் அவ்வாறே பிரமனைக் காட்டிலும் கவிஞர்களைப் பெரியவர் களாகப் பாராட்டிப் பாடியிருக்கிறார். கவிஞர் இளந் தேவனும் இந்நூலில்,

"நான்முகப் பையனின் நாட்டியப் பொம்மைகள்
நாற்றிசை வாழ்ந்திடும் மாக்கள்."

என்று நான்முகனைப் 'பையன்' என்று காட்டுகிறார். கவிதையின் பெருமையை—கவிஞர்களின் பெருமையைச் சுட்டும் சான்றாகக் கவிஞர் இளந்தேவனின் இத்தொடரை யும் இனி நாம் காட்டலாம்.

தேடல், கூடல், பாடல் என மூன்று பகுதிகளையும் இருபத்தாறு கவிதைகளையும் கொண்டுள்ள இந்நூலுக்கு டாக்டர் வலம்புரிஜான் தந்துள்ள மதிப்புரை ஒரு சிறிய உரைநடை இலக்கியமாகும். "சக்தியைப் பற்றிச் சங்கீதம் பாட, சிலுவை சிவலிங்கத்திற்கு ஆணை இடுவதோ?" என்று வினவக்கூடிய சிலருக்கு "எம்மதமும் சம்மதமே" என்ற கருத்துத் தெளிவினை ஊட்டுகிறார் வார்த்தைச் சித்தர் அந்த முன்னுரையிலே.

டாக்டர் வலம்புரிஜான் அவர்களின் தூண்டுதலால் அன்னை மூகாம்பிகையைத் தேடவும், பாடவும், முற்பட்ட கவிஞர் இளந்தேவன் "நான் பாடத் தொடங்குவதா? இந்தப் பாட்டிலும் உண்மையுண்டா?" என்ற ஐயத்துடனே இந்த நூலைப் பாடத் தொடங்கியிருந்தாலும்கூட "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று பேரறிஞர் அண்ணா

அவர்கள் எடுத்து விளக்கிய திருமூலரின் கருத்தை அடியொற்றியே இந்நூலையும் உருவாக்கியிருக்கிறார்.

"வீடுதோறும் விளங்குகின்ற தாயெல்லாம்
உன்னுடைய தாய்மாரே! ஒப்புக்கொள் என் தோழா!"
"இருந்தாலும் எனக்கொரு தாய்?"
இருக்கின்றாள் கொல்லூரில்!"

என்று 'உலகிற்கு ஒரே தெய்வம், அது தாய் மூகாம்பிகைத் தெய்வம்' என்பதாக மூகாம்பிகையைப் பல்வேறு கோணங்களில் 'அவளே காமாட்சி', 'அவளே மீனாட்சி', 'அவளே விசாலாட்சி', 'அவள் சேரியிலே மாரி', என வடித்திருக்கும் இந்நூல் ஒரு சமய நூலாக மட்டுமின்றி ஒரு சமுதாய சமத்துவ நூலாகவும் திகழ்கிறது.

இந்நூலைப் போன்றே பயன்மிகு கவிதைகள் பல வற்றைப் பாடிக் கவிஞர் இளந்தேவன் மேலும் மேலும் புகழ் கொள்ள வேண்டும். அருமை நண்பர் வானதி திருநாவுக்கரசு அவர்கள் தமிழுலகம் படித்துப் பயன்கொள்ள மென்மேலும் இவை போன்ற நல்ல கவிதை நூல்களை வெளியிட வேண்டும். இவர்களுக்கு அன்னை மூகாம்பிகை, முழு நிலவாய் நின்று அருள்பாலிப்பாள் என்பதைத் தெரிவித்து, இவர்களுக்கு என் நல்வாழ்த்துக்களை மகிழ்வோடு தெரிவித்துப் பாராட்டுகிறேன்.

சென்னை
22-10-87

இராம. வீரப்பன்

## வலம்புரி ஜான் வரைவது

"மூகாம்பிகையே! முழுநிலவே!" என்கிற இந்தச் சொல் ஊறும் சுவைத் தேன் படையலைச் சொந்த நாட்டு மக்களின் திருமுன் படைப்பதில் பரவசமடைகிறேன்.

இதிகாசப் புகழ்பெற்ற இந்த மலைமாதாவின் மடியில் இப்போதெல்லாம் அடிக்கடி நான் தவழ்ந்து தமிழாடி வருகிறேன்.

வலிமையான வார்த்தை வருணனைக்குள்ளும் பிடிபடாத வசீகரத்தோடு அவள் என்னை வாழ்த்திக் கொண்டிருக்கிறாள்; வாழவைத்துக் கொண்டிருக்கிறாள்.

இப்படி நான் எழுதுவதால் கண்களைப் பெறாத காரணத்தால் கதிர் வருவதில்லை, காட்சி தெரிவதில்லை என்று கதறிக் கொண்டிருக்கிற பகுத்தறிவு வாதிகள் சிலர் பதைக்கிறார்கள். இவர்களாவது மன்னிக்கப்பட வேண்டியவர்கள். கிணற்று நிலவைப் பிடிப்பதற்கு கீரைத் தோட்டத்திற்குள் வலைவிரிக்கிற அறிஞர்கள் இவர்கள். ஆகவே இவர்கள் மீது நாம் இரக்கப் படத்தான் வேண்டும்.

இன்னும் சிலர் இயேசுநாதரைப் பின்பற்றுவதாகச் சொல்லிக்கொண்டு இரக்கமில்லாமல் நடந்து கொள்ளுகிறவர்கள். இவர்களில் சிலர் மூக்கிற்கு அப்பாலும், பார்க்க இயலாத 'முற்போக்காளர்கள்'. என் மூதாதைகளைப் போலவே இவர்களின் மாதா பிதாக்களும் இந்து சமயத்தில் இருந்தவர்களே. பல்வேறு சமுதாய, பொருளாதாரக் காரணங்களால் அந்த மாதாபிதாக்கள் வணங்குகிற கடவுளை (!) மாற்றிக் கொண்டார்கள். அவர்களின்

பிள்ளைகள் தான் இந்தப் பிஞ்சுப் பொம்மைகள்! இருந்தும் இவர்கள் தான் ஒளிவெள்ளத்தில் ஒய்யாரப் படகு விடுகிறவர்களைப்போலவும், மற்றவர்களெல்லாம் அந்தகாரத்தில் அழுந்திக் கிடக்கிறவர்களைப் போலவும் கதைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் இருட்டுக்குப் போட்டுக் கொள்வதற்காகக் கருப்புச் சட்டை தைக்கிற கண்ணில்லாத குருடர்கள். உண்மை! தங்களது ஏகபோக உரிமை என்கிற தவறான கணிப்பில் எக்காளம் ஊதுகிறார்கள்.

இயேசுநாதர் வரலாற்றுத் தலைவர்; வழிபடத்தக்கவர். நமது போராட்டம் அவரோடல்ல: அவரை உதட்டளவில் சொல்லிக் கொண்டிருக்கிற அழுக்குத் தேமல்களான போலிகளை, பொல்லாங்குக்காரர்களை எதிர்த்து.

'எம்மதமும் சம்மதம்' என்று சொல்லுகிற போது விளைவுகளைத் தெரிந்து கொண்டே சொல்லுகிறேன். மூர்க்கத்தனமாக என்னைத் தாக்குகிறவர்களின் அறிவில் வெளிச்சம் விதைக்கப்பட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். காலம் கனிகிறபோது என்பார்வை எவ்வளவு பக்குவமானது என்பதை அவர்களின் பேரப்பிள்ளைகள் தெரிந்து கொள்வார்கள்.

அந்தோனியார் ஆலயத்திற்கு வருகிறவர்களெல்லாம் இந்துக்கள் என்று கழுத்தை நீட்டி காதை வளர்த்து—விழியை விரித்து—விலா எலும்பு நீட்டி—பெருமைப்படுகிற நீங்கள் 'இந்து'க் கோயிலுக்கு ஒரு 'கிறிஸ்தவன்'(!) செல்லுவதற்காக வீட்டுக் கூரைகளில் ஏறி

உட்கார்ந்து கொண்டு விதண்டாவாதத்தில் ஈடுபடுகிறீர்களே—எதற்காக?

மூகாம்பிகை அம்மன் மீது நான் கொண்ட மூவாதகாதலை முறையாக வெளிப்படுத்தவே எனது 'தாய்' வார இதழில் 'அந்தக இரவில் சந்தன மின்னல்'' என்று தொடர்ந்து எழுதி வருகிறேன். அந்தக் கட்டுரை இலட்சக்கணக் கான வாசக நண்பர்களின் நெஞ்சங்களிலெல் லாம் இனிய நினைவுகளைச் சிந்திச் செல்லுகிற இந்த நேரத்தில் கவிஞர் இளந்தேவன் அவர் களின் இந்தக் காவியப் பேழையை உங்கள் திருமுன் படைப்பதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

கவிஞர் இளந்தேவன் பதப்பரதம் தெரிந்த பாட்டுவானப்பறவை. இந்த அதிசயப்பறவை யின் ஆராதனைக்குரிய விரல்களுக்கு வியக்க வைக்கும் வித்தக வீச்சும் உண்டு; விரைந்து கிழிக்கிற வீரியப் போக்கும் உண்டு. அதுதான் காலத்தை வெல்லும் கவிஞனுக்குள்ள காவிய முத்திரை. புகழ்ந்தால் நிலவைப் புகழ்வது; பழித்தால் திமிங்கிலத்தைப் பழிப்பது. கவிஞர் இளந்தேவனை ஒரு கவியரங்கத்தில் கேட்டேன். என் காது மேடைகளை இந்த ஈரக் கவிஞனின் இதயம் அன்றுதான் வாடகைக்கு அமர்த்திக் கொண்டது. கவிதை மின்னுகிற கண்களும், கறுத்த மேகம் போல் கலைந்து திரிகிற கேசமும், குழிக்கிழங்குபோல் குறைவற்ற வளர்ச்சியும் கவிஞரின் புற அடை யாளங்கள்.

காலத்தை வென்று வாழப்போகிற தீர்க்க தரிசனமும், எழுந்து நடக்க வலுவில்லாதவர்

களை வரவேற்று மகிழுகிற ஈரமும், தன்னை உருக்கி, தணல் குறைத்துத் தமிழ்பாடும் பேராற்றலும் அவரது உள் அடையாளங்கள்.

'சந்திரக் கிண்ணத்தின் வெண்ணிறப் பாலுக்குச் சர்க்கரை போடவில்லை' என்கிற அவரது பாடலை என் உதடுகள் உச்சரிக்காத மந்திரப் பொழுதுகளுமில்லை; மணித்துளி களும் இல்லை.

நான் கேட்டுக் கொண்டதற்கு இணங்க குந்திக் குரலெடுத்துக் கூவ வந்தது இந்த மாங் குயில்!

புதுக்கவிதைவெள்ளம் மரபுப் பாத்திகளில் மத்தளச் சத்தத்தோடு மனங்கவர வருகிறது.

அம்பிகை புகழ்பாடும் அவரது எழுத்து விரல்களை எண்ணி இன்று முத்தமிடுகிறேன்.

இந்நூலின் முதல் பிரதிதனைக் கொல்லூர் திருத்தலத்தில் வழங்கும் இருபதாம் நூற் றாண்டின் இணையற்ற அருட்சித்தர்—ஆன்ம ஞானி தவப்பெருந்திரு காயத்ரி சுவாமிகளை வணங்கி மகிழ்கிறேன்.

உற்ற நண்பர் உழுவலன்பர் எப்பிறப்பி லும் உடன்வரும் இனிய இலக்குவன்—கவிஞர் தமிழ்மாறன் அவர்களுக்கு நன்றி!

தாயே! உலகாளும் தனிமுதலே! பிச்சிப்பூச் சொற்களால் பின்னி நாங்கள் முடித்த இந்த அச்சுப் பூ ஆரத்தை அணிந்து கொள். அம்மா!

என்றென்றும் அன்புடன்,
**வலம்புரிஜான்**

## நன்றிப் பூக்கள்

கொல்லூர் அன்னையின் கொலு மண்டபத்தில் இக்காவியம் வெளியிடப்படும் போது, அருள் ஞான குருவாய் ஆசி பகரும் ஸ்ரீலஸ்ரீ காயத்ரி சுவாமிகள், வெளியிட்டுப் பெருமைப்படுத்தும் வித்தகத் தமிழ் வேந்தர் வலம்புரிஜான், முதல் பிரதி பெறும் பெருமகனார் அடையாறு சுவாமி நாதன், வாழ்த்துரை வழங்கும் ஆருயிர்த் தோழர் அருங் கலைவாணர் தமிழ்மாறன், விழாஇட ஏற்பாடு செய்துதவும் அருள்மிகு மூகாம்பிகை ஆலயத்தார், திருத்தலப் பயண ஏற்பாட்டுக்கு முன்னின்று ஆற்றுப்படுத்தும் சென்னை ஜெயலட்சுமி டிராவல்ஸ் நிறுவனத்தார் இவர்கள் அனை வருக்கும் நெஞ்சிலே பூத்த நன்றிப் பூக்களைக் காணிக்கை யாக்குகிறேன்.

நூலை அழகிய முறையில் வெளியிட்ட கவிதாபானு பதிப் பகத்தார்க்கும், அச்சிட்ட 'மேரேலால் பவர் பிரஸ்' அச்சகத் தார்க்கும், முகப்பு ஓவியம் தீட்டிய ராமு அவர்களுக்கும் அச் சிட்ட வீகம் பிரிண்டர்சாருக்கும் உடனிருந்து பிழை திருத்தி உழைத்த தோழர்கள் ஸ்டேன்லி, தமிழ்தாசன், இராமச் சந்திரன் ஆகியோருக்கும் இந்நூலின் வடிவமைப்பில் தொடர்புடைய ஏனைய தோழர்கள் எல்லார்க்கும், நன்றி மணக்கும் நறுமணப் பூக்களைப் படைத்து மகிழ்கிறேன்.

அன்னைக்கு ஏற்றும் இந்தச் சின்ன சுடரை என்னிரு கைகளோடு இவர்களுடைய கைகளும் ஏந்துகின்றன.

நன்றி!

சென்னை-86 இளங்தேவன்

*13-1-83*

# காவியம் பிறந்த கதை

எண்ணங்களுக்கு வண்ணங்கள் உண்டா? இருக்கலாம். ஆனால் அவற்றுக்கு மணம் இருக்கிறது என்பது மட்டும் மாபெரும் உண்மை.

இதோ, என் எண்ணங்கள் கற்பூரம் மணக்கின்றன.

இப்போதுதானா? இல்லை, எண்பத்து இரண்டின் ஏப்ரல் மாதம் ஒரு திங்கட்கிழமையைப் பெற்றெடுத்த போதிலிருந்து!

அந்தத் திங்கட்கிழமை பிற்பகல் நேரம் நான் 'தாய்' வாசலில் நின்ற பொழுதிலிருந்து!

வழக்கு ஒன்றில் ஆலோசனை கேட்பதற்காக, வலம்புரி யாரை அணுகினேன், அவர் வக்கீல் என்ற காரணத்தால்!

அவர் வழக்குக்கு யோசனை வழங்கினாரோ இல்லையோ, என் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தினார்.

'அன்னை' எனக்கு அறிமுகமானாள்!

'தாய்' முகவரி தேடிச் சென்ற எனக்கு இன்னொரு 'தாய் முகவரி' தானாகவே கிடைத்தது.

இலக்கிய உரையாடலுக்கு இடையே திடீரென்று என்னை உற்றுப் பார்த்து, 'மூகாம்பிகை மேல் ஒரு காவியம் பாடுங்களேன்' என்றார்.

ஒரு தாக்குதல் என்மேல் நடந்துவிட்டது; நான் சலன மடையவில்லை.

கண்கள் எனக்கு மிகப் பிடிக்கும். அவை யார் கண்களாக இருந்தாலும் சரி!

கண்கள் மனித வீட்டின் சாளரங்கள்! அவற்றின் வழியே சிறைப்படுத்தப் பட்டிருக்கும் ஆன்மா எட்டிப் பார்க்கிறது. இது என் சித்தாந்தம்!

உடல்களோடு பேசுகிறவன் உதடுகளை நம்பியிருக்கிறான். உயிர்களோடு பேசுகிறவன் கண்களையே பயன்படுத்துகிறான்.

நான் கண்களையே பயன்படுத்துகிறேன்.

அப்போது கண்ட அந்தக் கண்கள் ஒரு குழந்தையின் கண்கள். ஆனால் அவற்றின் வழி ஒரு தாயல்லவா எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள்!

கடமை என்பது ஒரு சிலுவை! சிலரால் மட்டுமே அதைப் பொறுமையாகச் சுமக்க முடிகிறது!

கம்பனும் காளிதாசனும், சங்கரரும் அபிராமி பட்டரும் சுமக்கவேண்டிய கடமைச் சிலுவையை நான் சுமந்தேன்.

ஏசுவுக்கு மட்டுமே உரிய சிலுவையை, சீமோன் கூடச் சிறிதுநேரம் சுமந்தானே, அதைப் போல!

இந்தப் பணிக்கு ஒரு 'ஞானஸ்நானம்' தான் 82, ஏப்ரல் 12ஆம் நாள் நடைபெற்றது!

தேவனின் மைந்தனாக இருப்பதால், ஏசு கூட இளந்தேவன் தான்!

ஏசுவாகிய இளந்தேவனுக்கு ஞான ஸ்நானத்துக்கு ஒரு ஜான் தேவைப்பட்டார்!

எனக்கும் அப்படித்தான்!

ஆனால் நான் நின்று கொண்டிருந்தது,

ஜோர்டான் ஆற்றங்கரையன்று!

நெல்சன் மாணிக்க முதலியார் சாலை!

என்னை எழுத வைப்பதற்காக, வலம்புரியார் பட்ட பாட்டை, தொலை பேசிகள் அறியும்; தூது வந்தே இளைத்துப் போன கவிஞர் தமிழ்மாறன் அறிவார்! அப்படியொடு 'கண்ணாமூச்சி' யாட்டம் ஆடியிருக்கிறேன்.

இந்தக் காவியத்துக்கு ஏவுதற் கருத்தா 'தாய்'! இயக்குதற் கருத்தா வலம்புரி! இளந்தேவன் வெறும் கருவி!

அறிஞர் பெருந்தகை நல்லபெருமாள் வீட்டில் அரங்கேற்ற ஒத்திகை நடந்தபோது, இது முழுக்கத் தைத்து முடிக்கப்படாத சட்டை என்பது எனக்கு மட்டுமே தெரியும்.

நாலைந்து நாட்களில் படியெடுத்துத் தருகிறேன் என நான் மொழிந்தபோது, 'பரவாயில்லை, இரண்டு வாரங்களில் தாருங்கள்' என வலம்புரி வாய் மலர்ந்தார்.

ஓர் இமாலயத் தவறைப் புரிந்து கொண்டிருக்கிறோம் என்பதை அவர் அப்போது அறியவில்லை. அதற்குப் பின் ஆறு வாரங்கள் ஓடிவிட்டன! அட்சரம் ஒன்றுகூட படியெடுக்கப்படவில்லை! நூல் முடிக்கப்படவும் இல்லை!

சாம தான பேதங்கள் பயனளிக்காதபோது தண்டம் தவறான உபாயமன்று!

இந்த முழுநிலா நாள் விடிகாலைப் பொழுதிலே, இதோ அவர்கள் நேரிலேயே வந்து விட்டார்கள்.

இனி நான் தந்துதான் ஆகவேண்டும்!

இஃதென்ன முயற்சி?

சக்தியைப் பற்றிச் சங்கீதம் பாட, சிலுவை சிவலிங்கத்துக்கு ஆணையிடுவதா என்று 'மண்டைக் காடு'கள் பெருமூச் செறியலாம்!

அவர்களுக்காகச் சொல்லுகிறேன்.

அன்னை மூகாம்பிகை,

சேரியிலே மாரி!—எங்கள்

சேசுவின் தாய் மேரி!

ஊமைகளின் தலைவியே! எங்கள் உடற்கூட்டின் ஒவ்வொரு சிற்றறையிலும் ஒளியேற்று தாயே! உலகம் ஒன்றைப் புதிதாக நாங்கள் படைக்கப் போகிறோம்!

அம்மா!

அம்மா!

அம்மா!

அடைக்கலம் நீயே!

சென்னை-86
முழுநிலா நாள்
3-9-82

இளந்தேவன்

# காவியத்தின் உள்ளே

## தோரண வாயில்



பகுதி—1

## தேடல்



பகுதி—2

## கூடல்

16. ஆற்றங்கரையில் ஓர் அணுசக்தி உலை!
17. அன்னை பேசுகிறாள்!

## பகுதி—3
## பாடல்

18. மூகாம்பிகையின் கோலம்-ஒன்று-கலைமகள்
19. மூகாம்பிகையின் கோலம்-இரண்டு-திருமகள்
20. மூகாம்பிகையின் கோலம்-மூன்று-காளி
(ஊழிக் கூத்து)
21. அவளே காமாட்சி!
22. அவளே மீனாட்சி!
23. அவளே விசாலாட்சி!
24. அவள் சேரியிலே மாரி!
25. அவள் அன்னை வடிவமடா!
ஆதிபாராசக்தி தேவியடா!

## மங்கல வாழ்த்து

26. மூகாம்பிகையே! முழுநிலவே!

## எங்கெங்கு காணினும் சக்தியடா!

சக்தி என்பவள்
சுடாத நெருப்பு!
சந்திர ஒளியின்
குளுமையும் அவளே!
சக்தி என்பவள்
எரிமலைக் கவிதை!
சங்கக் கவிதையின்
மென்மையும் அவளே!
சக்தி என்பவள்
சாகாத் தத்துவம்!
சக்தியே தாயாய்ச்
சந்ததம் காப்பவள்!
ஆட்டமிடும் பூதங்கள்
ஐந்தாகும்! அவை அவளின்
வேட்டைநாய்க் கூட்டம்
விரும்பியதைத் தான் முடிக்கும்!
குரூரத்தில் கூட
கொலுவீற் றிருக்கின்ற
அவளே இருக்கின்றாள்!
அவள் மட்டும் இருக்கின்றாள்!

## தமிழ் வாழ்த்து

பொன்பூத்த இமயமும் பூப்பூத்த பொதியமும்
புகழ்பூத்த திருச்செல்வியாய்ப்
புதுத்தென்றற் காற்றிலே இழைந்தோடும்
மென்மையாய்ப்
பூபாள இசைப் பாடலாய்க்

கண்பூத்த திசையெலாம் கவிபூக்க வைக்கின்ற
கவின் பூக்கும் திருமேனியாய்க்
கலைபூக்கும் நெஞ்சிலே கதிர்பூத்த முடியோடு
காண்கின்ற ஒரு ராணியாய்

மண்பூத்த மொழியெலாம் மகராசி இவளென்று
மகிழ்வோடு தலைதாழ்த்தவே
மாணிக்க முடிசூடும் ஆணிப்பொன் நிறத்தாளுன்
மகளென்று நிலைநாட்டினாள்

விண்பூத்த மீன்கொடி கண்கூச மூக்குத்தி
விளங்கிடும் உன்போலவே
விழியாலே எமைக்காக்கும் திறம்பார்த்துக் களிப்போடு
வியக்கின்ற மீனாட்சியே!

ஆத்தாளை நீத்தாரும் அம்மாஎன் றழைக்கின்ற
அருள்மேனி வடிவானவள்!
ஆண்டவனைத் துறந்தாரும் தெய்வமெனத் தொழுகின்ற
அன்னையென நின்றாளிவள்!

கூத்தாடும் பெருமானும் கொண்டல் மணிவண்ணனும்
கொவ்வை வாய் நீரூறியே
குழந்தையிவள் சொல்லுக்குத் தினமேக்கம்
கொள்ளுவதைக்
கூறுவதும் எளிதில்லையே!

காத்தாளும் செல்வி! இவள் கற்கண்டு மொழிக்காகக்
கனவிலும் நீ உருகினாய்!
கங்கைக்குச் செல்கின்ற குமரகுரு பரன்கண்ட
கனவிலே நீ தோன்றினாய்!

மூத்தானும் இளையானும் இருந்தாலும் பெண்பிள்ளை
முத்தத்துக் கேஏங்கினாய்!
முத்துவடம் தனைத்தந்து மொழிகேட்டுக் கள்வெறியில்
மூழ்கினாய் மீனாட்சியே!

விண்நீலப் பட்டாடைவிண்மீன்கள் முத்தாரம்
வெண்ணிலா முகமாகுமோ!
வெட்டவெளி தனிற்சுற்றும் இப்பூமி எனும்பந்து
விளையாட்டுப் பொருளாகுமோ!

கண்நீல மலரிந்தக் கன்னிக்குப் புகழ்பாடக்
கடல்கூட ஒருசேவகன்!
கடலோர மணல்ஏரல் இவள்வாழ்ந்த கதை தீட்டக்
கற்கின்ற ஒரு மாணவன்!

வெண்நீல நதியோரம் வெளிர்மஞ்சட் பூப்பூக்கும்
விடிகாலை நேரத்திலே,
வேய்ங்குழல் கேட்கையில் மாங்குயில் இசைபாடும்
வெளியெலாம் இவள் தோன்றுவாள்!

தண்மேனி குளிரோடைத் தாமரைச் சுகங்காட்டும்
தளிர்மேனி எழிற்கூத்திலே
தாளமுடன் நாட்டியம் பிறந்ததெனச் சொல்லுமித்
தரையெலாம் மீனாட்சியே!

கல்லிலே செதுக்கிடும் கவிதைகள்பலநூறு
கண்டவள் எங்களன்னை
கல்லிலாத் தஞ்சையும் கடலோர மல்லையும்
கலைக்கோயில் ஆக்கிவைப்பாள்!

வில்லிலே அம்பேந்தி விரிகின்ற கடல்தாண்டி
விளையாடும் இவள்தோள்களால்
விளைந்ததே காம்போஜ நாட்டிலே அங்கோர்வாட்
விசித்திரக் கலையாலயம்!

சொல்லிலே செதுக்கிடும் சுடர்க்கோயில் கற்பனைச்
சுதைவேலை எழிற்கோலமும்
சொல்லொணா அற்புதக் கற்றச்சு வேலையும்
சொன்னவள் இவளன்றி யார்?

கல்லெல்லாம் கவிபாடக் கருந்தேக்கும் மொழிபேசக்
கற்பித்த முதற்சிற்பி யார்?
கலைமலர்கள் இவையெலாம் கன்னியிவள் புகழுக்குக்
காரணம் மீனாட்சியே!

முகத்திலே கண்கொண்டு மட்டுமே பார்ப்பவர்
முட்டாள்கள் ஆகையாலே
மொழிவெற்றுக் கருவியென முழுமூட உபதேச
முத்தினை உதிர்ப்பதுண்டு!

அகத்திலே கண்கொண்டு பார்ப்பவர்கள் மட்டுமே
ஆன்மாவின் உயிர்ப்பாடலாய்
அதுவாழ்வில் திகழுவதை அன்றாடம் உணருவார்
அத்தன்மை எமக்குண்டுகாண்!

முகத்திலும் அகத்திலும் கண்கொண்டு பார்ப்பதால்
முத்தமிழ் உயிரென்றிடும்
முழுஞானம் கைவந்த திருஞானச் செருக்காலே
மூவுலகை விலைபேசுவோம்!

இகத்திலே மட்டுமா பரத்திலும் இவளாலே
இன்பமெனக் கண்டதாலே
எங்களது கோயிலில் இனியாட்சி செய்பவள்
இவளென்க மீனாட்சியே!

'நாவலந் தீவுமொழித் தெய்வங்கள் பதினான்கு
நற்றமிழ் அவற்றிலொன்று
நாமெல்லாம் சமம்' எனும் நரிகளின் தந்திரம்
நடக்குமா மீனாட்சியே!

கோவிலில் பரதெய்வம் இவள் மட்டும் பிறரெல்லாம்
குற்றேவல் பரிவாரமே!
குழந்தைகள் தாயுடைய கொலுமன்றில் பணிசெய்தல்
குறையில்லை கடனாகுமே!

சாவிலுந் தமிழ்கற்ற மாணவன் எனச்சொல்லும்
சான்றாளன் சான்றாகிறான்!
சாகாத போப்பையன் இவள் தொண்டனாகியே
சரித்திரத் தூணாகிறான்!

ஆவிநிகர் தமிழ்மகளின் தனித்தன்மை நிலைநாட்டும்
அயலவரும் தமிழராவார்!
ஆதிக்க மொழிக்கடிமை ஆனசில பேடுகள்
ஆவாரோ மீனாட்சியே!

வாயில்லை எனும்போது வயிற்றுக்கு வழி ஏது?
வாழ்வுக்குப் பொருளில்லையே!
வளர்காதல் தமிழன்னை இல்லையெனும்
போதிலெம்
வளர்ச்சிக்கு வழியில்லையே!

தீயில்லை எனும்போது மனிதவுடல் சவமென்று
தீட்டுவதில் பழுதில்லையே!
'தீந்தமிழ் இல்லையெனில் தென்னாடு பிணம்'
இந்தத்
தீர்ப்புக்கு மறுப்பில்லையே!

தாயில்லை எனச்சொல்லும் தடிமுண்ட
மகனின்னும்
தரைமீது பிறக்கவிலையே!
தமிழில்லையேல் உலகில் மொழியில்லை
எனச்சொல்லத்
தரையின்னும் மறக்கவிலையே!

நீயில்லை யெனச் சொல்லும் நெறிகொண்ட
தோழரும்
இவளில்லை என்றதிலையே!
நின்னிலும் புகழ்மிக்க அரசாட்சி செய்வாளோ
நீசொல்க மீனாட்சியே!

வீறுபெறும் அனைத்துலக மாநாடு கண்டவெம்
வெற்றிமகள் தமிழ்ச்செல்வியை
வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும்
பாவேந்தன்
விண்ணமுதம் எனும் சக்தியைச்

சீறிவரும் பகையென்ன செயமுடியும்? இம்மண்ணில்
செம்புழுதி யாகமுடியும்!
செல்லாயிரங்கோடி வந்தாலென்? செந்தீயில்
சிறுசாம்ப லாக முடியும்!

ஏறுநடை எம்.ஜி. ஆர். இருபதாம்நூற்றாண்டின்
எழிற்பாரி பிறந்து வந்த
ஈழமெனும் தாய்நாட்டின் தோழர்விடு தலைக்காக
என்னவிலை தரவேண்டுமோ!

கூறுதமிழ் மீனாட்சி! ஐ. நாவில் என்றைக்குக்
கொலுவோச்ச இவள் செல்லுவாள்?
கொதிக்கின்ற செங்குருதி மீதாணை! அவ்வலிமை
கொடுப்பாய்நீ மீனாட்சியே!

## ஒரு காவிய நாயகியும் கற்பனைப் பறவையும்

அன்னைமூ காம்பிகையே!—உயிர்
ஆற்றலுக் கோர் முதலே!—அடி
என்னடி சோதனையா?—நூல்
எப்படி நான் படைப்பேன்?

தேடத்தொ டங்குகிறேன்—அந்தத்
தேடல் முடியுமுன்னே,—நான்
பாடத் தொடங்குவதா—இந்தப்
பாட்டிலும் உண்மையுண்டா?

தாமரைப் பூக்களுக்குச்—செம்மை
தந்திடும் பாதங்களை—உன்
சேமத் திருவடியை—என்
சிந்தையில் வைப்பாயா?

பொன்மனச் செம்மல்களின்—மனப்
பூமிசை நீயிருப்பாய்!—நான்
கல்மனக் காரனடி—உன்
கால்கள் வருந்தாவோ?

மின்னற் புழுவெடுத்து—விண்
மீனுக்குத் தூண்டிலிடும்—வெறி
தன்னைப் படைத்த தல்லால்—என்ன
தன்மை படைத்துவிட்டேன்?

வானத்து வில்லெடுத்து—முல்லை
வாசத்தை மேல்தடவி—ஒரு
கானக் குயில் கழுத்தில்—இடும்
கற்பனைப் பைத்தியம் நான்!

நெட்டைக் கனவுகளில்—இள
நெஞ்சைப் பறிகொடுக்கும்
சிட்டுக் குருவியடி—கூடு
செய்யத் தொடங்குதடி!

அன்னை இதழ்களிலே—வரும்
அற்புதப் புன்னகையில்—முற்றும்
தன்னை இழந்துவிடும்—சின்ன
தாரகை நானடியோ!

கீற்றுகள் சித்திரமா?—அடி
கேவல்கள் இன்னிசையா?—வெறும்
கூற்றுகள் வேதங்களா?—என்
கூக்குரல் அப்படித்தான்!

நெற்றி நெருப்படியோ—என்
நெஞ்சில் விழுந்ததனால்—பயம்
பற்றி எரியுதடி—உடன்
பாடல் பிறக்குதடி!

வான்துயில் போக்குதற்கோ—கையில்
வலம்புரி ஏந்துகிறாய்?—உனை
நான்துயில் போக்குதற்கே—பார்
நற்றமிழ் ஏந்துகிறேன்!

அன்னைமூ காம்பிகையே!—உயிர்
ஆற்றலுக் கோர்முதலே!—நான்
என்னைக் கொடுத்துவிட்டேன்—நீ
ஏற்றம் கொடுத்துவிட்டாய்!

## சாலையில்லா மணல்வெளியில் சந்தேகம் நடக்கிறது!

காலடிகள் இல்லாத கால மணற்பரப்பு!
காலமணற் பரப்பில் கண்மயங்கி நடக்கின்றேன்!

எங்கு தொடங்கினேன்? என்று தொடங்கினேன்?
எப்போது முடியும்? இதுவரைக்கும் தெரியாது!

நீலநிற வானே! நீண்டுசெலும் பெருவெளியே
பாலை மணலே! பகலே! இரவுகளே!

என்றும்போல் தோன்றி எப்போதும் போல்மறையும்
ஆதவனே உமக்கெல்லாம் அலுப்பே கிடையாதா?

உண்ணல் கழித்தல் உறவைப் பெருக்குதற்கு
ஒருத்தி தனைக்கூட்டல் யார்வகுத்த திட்டமிது?

தூங்க விழித்திருந்து விழித்திருக்கத் தூங்குகின்ற
மானுடப் பூச்சிக்கேன் மமதை? களியாட்டம்?

அர்த்தமில்லா வாழ்க்கை! அதைப்பற்றி எழுகின்ற
அர்த்தமிலா வாதங்கள்! ஆத்திகம்! நாத்திகம்!

பல்லாயிரங் கோடி பழம்புதிர்கள்! விடுவிக்கச்
சொல்லால் புதிர்கள்! சொல்லவந்த புதுப்புதிர்கள்!

நாட்டுப் புதிர்நடுவே நடமாடும் ஒருபுதிராய்
நானும் குழம்புகிறேன் நடுநடுவே குழப்புகிறேன்
என்பதுபோல் வந்திருக்கும் இடுகாட்டு வேதங்கள்!

பக்தி வழியென்றும் பகுத்தறிவுப் பாதையென்றும்
எதைப்பற்றிப் பேசுகிறோம் என்பதே தெரியாமல்
வாதச் சுழல்களிலே வதைபட்டுச் சாகின்ற
வண்டு மனிதர்கள்! வார்த்தை இயந்திரங்கள்!

மனத்தின் சந்துகளில் மண்டிக் கிடக்கின்ற
அறியாமை தந்த அழுத்தத்தைத் தாங்காமல்
ஜன்னியிலே பிறப்பதனைத் தத்துவமாய் உரைக்கின்ற
சின்ன மனிதர்கள்! சிறுபொழுது ஞானியர்கள்!
மஞ்சள்துண் டொன்றெடுத்து மளிகைக் கடைவைக்கும்
மனிதகுலப் போதகர்கள் தூதுவர்கள் ரிஷிமார்கள்!

அவருரைக்குத் தன்மனத்தின் அசட்டுத் தனத்தை
யெலாம்
காட்டிப் பொருளுரைக்கும் கல்விக் களஞ்சியங்கள்!
அறியாமைக் கெழுந்த அஞ்ஞான விளக்கங்கள்!
கானல்நீர் கண்டு கையிரண்டில் வலைதூக்கி
மீன்பிடிக்கப் போகின்ற மேதாவிக் கூட்டங்கள்!

அவருரைத்த தத்துவத்தை அரைகுறையாய்ப் புரிந்து
கொண்டு
கொள்கைப்போர் எனும்பேரில் கோணல் போர் தனை
நடத்திக்
குருதியிலே கொப்பளித்துக் கொழுப்பை அசைபோடும்
குட்டிச் சாத்தான்கள்! குடல்கொழுத்த மானுடர்கள்!

முடிவே இல்லாத முட்டாள் 'தனம்'வைத்து
மூன்று தரப்புக்கும் வியாபாரம் நடக்கிறது!
இதுதானே வாழ்க்கை; இதற்கெதற்குப் போராட்டம்?

'மூலப் பொருளுண்டோ! முடிவதற்குக் கிடையாதோ!
நாயகன் கைக்கயிற்றில் நானுமொரு பம்பரமோ!'
இப்படிநான் சிந்தித்தால், இதன் பெயர்தான் ஆத்திகம்!

'கடவுளே! உனைப்படைத்த கடவுள் யார்? கல்லை
யெலாம்
கல்லால் அடிப்பேன் ஆகையினால் நான்மேதை!
இப்படிநான் கர்ஜித்தால் இதற்குப்பேர் நாத்தீகம்!

ஆத்திகம் சதுப்புநிலம்! நாத்திகம் சுடுகாடு!
ஆகையினால் நானோ அமைதியின்றித் துடிக்கின்றேன்!
மயக்கம் இதுவென்ன மானுடத்தின் தலைவிதியா?
மனிதகுல நீதியெது? அப்படியும் ஒன்றுண்டா!

சிந்திக்கச் சிந்திக்கச் சிக்கல் பெரிதாகும்
சிந்தனைக்கு முடிவில்லை! சிக்கலற வழியில்லை!
எதுதொடக்கம்? எதுமுடிவு? எதுவாழ்க்கை? எது
குறிக்கோள்?
எதுபாதை? எதுநன்மை? எதுதீமை? எதுவுண்மை?

இவையெல்லாம் கனவுகளா? இவற்றை அசைபோடும்
நானும் கனவா? நான் கனவின் பாத்திரமா?
இதை யெழுதும் கையும் எழுதுகோல் மையும்
இதைப்படிக்கும் நீயும் எல்லாமே பொய்தானா?

## தேடி எதிர்த்திசையில் தெளிவு வருகிறது!

ஏகாந்த மணல்வெளியில் எதிரே வருபவர் யார்?
(அச்சமே பல்லால், என் ஆன்மாவைக் குதறாதே!)

கள்ளி முளைக்காத கால மணல்வெளியில்
எதன் பின்னால் நானொளிவேன்? இதயமே
மெல்லப்போ!

ஆ! அந்த உருவம் அருகே வருகிறதே!
அச்சம் கரைகிறதே! அடடா நான் என்ன சொல்வேன்?

நம்பிக்கை சுரக்கும் நல்லவிழி நிலவுகளில்,
அன்புக் கதிர்வீசும் ஆனந்தத் திருமுகத்தில்
என்ன நான் காண்கின்றேன்? இதற்குமுன் கண்டதில்லை!

பின்னலிடும் சந்தேகம் பின்வாங்கி மறைகிறதே!
செவிக்குள்ளே விழுவதென்ன? தேனா? தமிழ்தானா?

விரக்திப் பாறைக்கு வேட்டு வைக்கும் வார்த்தைகளா?
(ஆ! மனமே! உற்றுக்கேள் அதுபேசப் போகிறது!)

''தோல்விக்குக் கால்முளைத்துத் தொய்ந்து
நடப்பதைப்போல்
தோழனே எதுவரைக்கும் தொடர்ந்து நடக்கின்றாய்?''

பேச முயல்கின்றேன் பின்புறமாய்க் கட்டியுள்ள
நாக்குப் பசு, கொஞ்சம் நகர மறுக்கிறது!

''விதிவழியே போகின்றேன்!'' ''விதியுனக்கு
உடன்பாடோ?''
''உறுதியாய் இல்லை; உலக வழக்குரைத்தேன்!''
''உலகவழி நடப்பாயோ?'' ''உலகம்என ஒன்றில்லை!''
''எதைத்தான்நீ நம்புகிறாய்?'' ''எதையும் நான்
நம்பவில்லை!''
''உன்மீது நம்பிக்கை?'' (ஒரு நிமிடம் முழு அமைதி!)
''என்மீதும் இல்லை! எவர்மீதும் கிடையாது''
''சத்தியமாய் உன்நெஞ்சில் சஹாரா தெரிகிறது!''
''சாம்பல்நிற மூளையிலும் சஹாரா தெரிகிறதோ?''
(என்னறிவைப் பற்றியோர் இறுமாப்பு எனக்குண்டு!)

"கவனிப்பார் இல்லாத கல்லறையைச் சுற்றிவிஷக்
காளான் முளைப்பதைப்போல் நூலால் அறிவுபெற்றாய்!
உணர்வைப் புதைத்துவிட்டு உபயோகம் ஏதுமில்லா
அறிவை வளர்ப்பதிலே அமைதி கிடைக்காது!"

"அறிவுதானே ஆற்றல்?" "அதிலுண்மை கிடையாது!
அறிவால் தொடமுடியா ஆழங்கள் பல உண்டு"
"அறிவால் தொடமுடியா உயரங்கள் கிடையாதே!
ஆண்டவனைக் கூடஎன் அறிவின்கை தொட்டுவிடும்"
"ஆண்டவனும் உள்ளானோ?" "அதைப்பற்றிக்
கவலையில்லை"

"என்ன முரண்பாடு? ஏனிந்தத் தடுமாற்றம்?"
"கடவுளிருந் தால்,ஏழை கஷ்டப் படுவானேன்?"
"ஏழைக்கு இதுவரைக்கும் நீஎன்ன செய்துள்ளாய்?"
"நான்யார் செய்வதற்கு? அரசாங்கம் செய்யட்டும்!"

"எதார்த்த உலகைவிட்டு இதுவரைக்கும் வந்தவன்நீ!
ஏழைதுயர் உன்னிதய இரும்பை உருக்கவில்லை!"
"நானொருவன் என் செயட்டும்!" "நல்லவினா
என் தோழா!

இப்படியோர் கேள்வியைநீ இதற்குமுன் கேட்டிருந்தால்
முப்பதுபேர் தலையெழுத்து முன்னே யழிந்திருக்கும்!"

"எப்படி நான் செயமுடியும்?" "இதோநான்
சொல்லுகிறேன்
நானொருவன் என்செயட்டும்? நலிந்தவரின்
துயர்போக்க
நானொருவன் என்செயட்டும்? உனக்குள்நீ
கேட்டுப்பார்!

அன்புக் கடலுனக்குள் அலைவீசி ஆர்ப்பதைப் பார்!
அதுதான் தொடக்கம்! அதற்கப்பால் வழிதெரியும்!"

''அன்பு செலுத்துவதும் அன்பை எதிர்பார்ப்பதுவும் பலவீனம் அல்லவா?'' ''பலமே அதுதான்கேள்! அன்புதான் வாழ்க்கைக்கு அர்த்தம் கொடுக்கிறது! அன்புக் கயிறுமட்டும் அறுந்து விடுமானால் அரைநொடியில் உலகம் தூள்தூளாய்ச் சிதறிவிடும்! அன்புதான் தெய்வீகம்!'' ''அஃதென்ன தெய்வீகம்?'' ''அச்சப் படவேண்டாம்! ஆத்திக வார்த்தையில்லை! மனிதத் தன்மைமுழு மலர்ச்சிபெற்றால் அப்போது தெய்வீகம் என்கின்றோம்! தேவருக்கும் இதற்கும் சம்பந்தம் ஒன்றும் சத்தியமாய்க் கிடையாது!'' ''கடவுளுக்கும் அன்புக்கும் கயிறுகட்டப் பார்க்கின்றாய்!''

''கடவுளைப் பற்றிஏன் கவலைப்படுகின்றாய்!
நானென்ன சொன்னேனா? நம்பிக்கையை மட்டும்
இதயத்தில் ஊன்றிவை எல்லாம் சரியாகும்!
உன்வாழ்வில் இதுவரைக்கும் உண்மையென ஒன்றை
மட்டும்

எப்பொழு தாவதுநீ எண்ணி யிருந்ததுண்டா?''
''ஆ! இல்லை!...ஆம்!ஆம்!ஆடிநாள் நிகழ்ச்சியது!
அன்னை மடிதனிலே ஆடித் தவழ்கையிலே
அவள்கண்ணில் கொப்பளித்த ஆர்வம்! அது உண்மை!

அதுதான்நான் உண்மையென ஐயமின்றி ஒப்புவது!''
''அதுதான்! அதுவேதான் அகிலமெங்கும் நிஜமாகும்!
அடுத்தவைகள் எல்லாம் அதனுடைய வெறும்நிழல்கள்!
உன்தாய் இறக்கவில்லை! ஒருதாயும் இறந்ததில்லை!
என்றைக்கும் இருப்பவள்தாய் இதைநம்பு மரண
மில்லை!''

## நமக்கொரு தாய் இருக்கின்றாள்!

சோதிக்குள் சோதி சுயஞ்சோதி ஆனஒன்றின்
ஆதிமுதல் தோற்றம்!
ஆதிமுதல் தோற்றம்
அன்னையவள் இல்லையெனில்
ஊதிவரும் பேரண்டம் வெறும்பிண்டம் ஆகாதா!

செங்குருதி தன்னை வெள்ளைநிறப் பாலாக்கித்
தந்த தனிக்கருணை!
தந்த தனிக்கருணை
தரைமீதில் இல்லையெனில்
இந்த உயிர் அத்தனையும் எமனுண்டு போகானோ!

என்னுள் இருந்து எனக்குள்ளே நானான
பெண்மைத் திருவடிவம்!
பெண்மைத் திருவடிவம்
பேசவைக்க வில்லையெனில்
உண்மையிலே நானுமொரு உணர்ச்சியற்ற கல்தானே!

வீட்டுக்குள் இருந்து வீடுபெற வைக்கின்ற
விண்ணகத்தின் தனித்தூது!
விண்ணகத்தின் தனித்தூது
வீட்டினிலே இல்லையெனில்
மண்ணகமும் சைத்தானின் மாநரகாய்ப் போகாதோ!

விளக்கறியா இருட்டறையில் வீழ்ந்திருந்த மானுடத்தின்
விழிக்குள்ளே விழுந்த சுடர்!
விழிக்குள்ளே விழுந்த சுடர்
விழிதிறக்க வில்லையெனில்
கிழக்கேது! மேற்கேது! கேடுநலம் இவை யேது?

ஆகையினால்,

தாயை வணங்கு!
தாயின் திருவடியில்
தானே அதோ அந்தச்
சொர்க்கம் இருக்குதென்று
சொன்னவரின் தாள்வணங்கு!
வானகத்தின் சாவி
வந்துவிழும் உன்கையில்!
மானுடத்தின் வெற்றி
மணக்கும் உன் செயல்களிலே!
நினைத்த செயல் முடியும்!
நினைவெல்லாம் சிவமாகும்
உள்ளத்துக் குள்மலரும்
ஓராயிரம் புதுமை!
வெள்ளத்தைப் போலன்பு
விழிவழியே பொங்கிவரும்!

ஆறா யிரம்வேதம்
அவைவடிக்கும் சாரமெலாம்
அம்மா எனும் சொல்லில்
அடங்கிவிடப் பார்க்கின்றாய்?
ஆமாம் உடன்பிறப்பே!
தாயைப்போல் ஆச்சரியம்
தரணியிலே இல்லையடா!
நாமெல்லாம் மக்கள்!
நமக்கெல்லாம் ஒருதாய்தான்!
அவளைப்பணிந்து வா
அண்டவெளி ஆள்வோம்நாம்!

## அன்னை முகவரியை அறியாத பிள்ளையுண்டா?

''என் தாயைக் காண்பேனா? எங்கென்று சொல்வாயா?''
''இன்னுமா ஐயம்? இதோபார் இதோஉள்ள
பாலையிலும் கீழே பசையிருக்கும் தோண்டிப்பார்!
குஞ்சு பொறித்தவுடன் குற்றுயிரை விட்டுவிடும்
நண்டைப்பார்! கொடுக்கினிலே நஞ்சுடைய தேளைப்
பார்!
அவையும் நம் தாய்மாரே! ஆருயிரைப் பெற்றெடுக்கும்
எவரும் நம் தாய்மாரே! எங்கெங்கும் தாய்க்குலமே!
வீடு தோறும் விளங்குகின்ற தாயெல்லாம்
உன்னுடைய தாய்மாரே! ஒப்புக்கொள் என்தோழா!''
''இருந்தாலும் எனக்கொருதாய்?''
''இருக்கின்றாள் கொல்லூரில்!
அறிவுக் குள்ளிருக்கும் அறிவை அறிபவரும்
அறிய முடியாத ஆதி பராசக்தி!

உன்சக்தி என்சக்தி என்பதெலாம் அவளுடைய
மின்சக்தி ஓட்டத்தில் மின்னுகின்ற சிறுபொறியே!
நூலறிவு மயக்கத்தால் நோய்கொண்ட வர்க்குமுயர்
வாலறிவு தந்தருளும் வாலை இளங்குமரி!
மதில்மேற் பூனைகளாய் மயங்கித் தவிக்கின்ற
அசடுகளுக் கெல்லாம் அவளல்லால் தாயில்லை
எங்கெங்கோ புயற்காற்றில் இன்னலுற்ற கப்பலெல்லாம்
நங்கூரம் பாய்ச்சுமிடம் அந்தத் துறைமுகம்தான்!
திராவிட நாட்டுத் தென்கன் னடத்தில்
சராசரங்க ளைப்படைத்த சத்தியத்தாய் அழைக்
கின்றாள்!
கோகர்ணம் பக்கத்தில் கொல்லாபுரி! அங்கே
போ மகனே உனக்குப் புரியா தனபுரியும்!
அன்னை முகவரியை அறியாத பிள்ளையே
மூகாம் பிகையென்று முணுமுணுத்துக்கொண்டே போ"!

## திக்குத் தெரியாமல்...!

திக்குத் தெரியாமல்—சுழலும்
தீச்சுடர்ப் பந்துகளே!
சக்திப் பெருங்கூத்து—நடத்தும்
சந்திர சூரியரே!

விண்ணை அறிவீர்நீர்!—விண்ணில்
விந்தைகளை நடத்தும்
பெண்ணை அறிவீரா?—அறிந்தால்
பேசுங்கள் தோழர்களே!

வானம் அறியாதோ!—வளி, நீர்
வையம் அறியாதோ!
மோனச் சிறுக்கியின்பேர்—நெருப்பெனும்
மூங்கை அறியானோ!

நீலநதிப் புனலே!—விழி
நீந்தும் பயிர்க் கடலே!
ஆலமரக் கிளியே!—என்
அன்னையைப் பார்த்ததுண்டா?

யாரிடம் கேட்டிடுவேன்?—அறிந்தோர்
யாரும் தெரியவில்லை!
ஓரிடம் காணுகிறேன்—அதிலுயிர்
ஓவியம் காணுகிறேன்!

## தென் கன்னடத்தில் ஒரு தேவதை

தெற்குக்கன்னட நாட்டினிலே—ஒரு
தேவதை இருக்கின்றாள்!—அவள்
தேவர்கள் மானுடர் யாவரும் காணத்
தெரிசனம் தருகின்றாள்!

மேலைத் திராவிட நாட்டினிலே—ஒரு
மீன்விழி இருக்கின்றாள்!—அவள்
மென்னகை வீசிய மின்னலிலே புதுக்
காவியம் படைக்கின்றாள்!

மாமலை ஓங்கிய பூமியிலே—ஒரு
மாமகள் இருக்கின்றாள்!—அவள்
மாயைகள் ஓங்கிய மண்ணகம் சீர்பெற
மதிஒளி தருகின்றாள்!

பச்சைப் பசுங்கடல் நடுவினிலே—ஒரு
பைங்கிளி இருக்கின்றாள்!—அவள்
பண்ணிய பாவமும் புண்ணியம் ஆகிடப்
பரகதி தருகின்றாள்!

அச்சம் தருகிற காட்டினிலே—ஓர்
ஆரணங் கிருக்கின்றாள்!—அவள்
அம்மா என்றொரு பாதகன் அழைப்பினும்
வாரி யணைக்கின்றாள்!

(தெற்கு)

## கோலபுரத் தாய் வீடு கோகர்ணம் பக்கத்தில்

வெற்றி மணக்குமிடம்—மன
வேட்கைகள் தீயுமிடம்—அன்னை
கொற்றம் நடத்துமிடம்—புகழ்க்
கோகர்ணம் பக்கத்திலே

மேகங்கள் பால்குடித்து—கண்கள்
மெல்ல வளருமிடம்—அவை
யோகங்கள் செய்யுமிடம்—உயர்
கோகர்ணம் பக்கத்திலே!

மேற்குக் கடற்கரையில்—எல்லை
மீறிவரும் காற்று—தன்னை
மாற்றிக் கடக்குமிடம்—மலைக்
கோகர்ணம் பக்கத்திலே!

அச்சத்தைத் தோலுரிக்கும்—வீர
ஆடவர் தம் சதையைக்—கையில்
பிய்த்துக் கொடுக்குமிடம்—பெரும்
கோகர்ணம் பக்கத்திலே!

மோகத்தைச் சாய்க்குமிடம்—காமன்
மூச்சை நிறுத்துமிடம்—இந்தத்
தேகத்தைக் காக்குமிடம்—பழங்
கோகர்ணம் பக்கத்திலே!

## குடமலையாட்டியின் குடசாத்திரி

நிலத்தில் எழுந்த
நீலநிற அலைகள்
மலைகள்! வான்தடவ
மண்உயர்த்தும் எழிற்கொடிகள்!

மேலைக் கடலலைக்குப்
போட்டியாய் எழுந்தவையே
மேகங்கள் கூடுகட்டும்
மேற்குத் தொடர்மலைகள்!

குடசாத் திரி, அவற்றில்
கொள்ளை அழகு
கொலுவிருக்கும் உயர்ந்தமலை!

அதுஎன்ன மலையா?
அன்னைக்கு எடுத்த
அழகுமிகும் கோபுரமா?
ஆருரைக்கக் கூடும்!

அனாதி காலமுதல்
அன்னை இருக்குமிடம்
அதனைக் காட்டுதற்கே
அது எழுந்து நிற்கிறதோ!

நெருப்புத் துறவறத்தை
நிகழ்த்திவந்த சங்கரர்க்கு,
சாந்தி அளித்த
சர்வக்ஞ பீடமது!

அடர்ந்து செறிந்து
அச்சத்தை ஏற்படுத்தும்
அம்பா வனம் போல்
அங்கு பல காடுண்டு!

கன்னி கழியாத
காட்டுப் பகுதி அது!
காட்டு விலங்குகளின்
காலடிகள் தவிர அங்கு
நாட்டு மனிதர்கள்
நடந்ததே கிடையாது!

ஆனாலும்
காலடியில் பிறந்தவரின்
காலடிகள் பட்டதுண்டு!

ஆகையினால் இங்கே
பூக்கும் மலர்களிலும்
புனிதம் கமழ்கிறது!

மரங்கள் தங்களது
தோள்குலுங்கச் சிரிக்கையிலே
மகரந்த மழைபொழியும்!
மண்முகத்தைத் தேன் நனைக்கும்!

பொன்சிந்தும் கொன்றையெலாம்
புலவர்களைப் போல், தாய்மேல்
பண்சிந்தும் பாச்சிந்தும்!
படைத்தவனின் புகழ்சிந்தும்!

ஆங்கே,
வேர்விட்டு நிற்பவை
விருட்சங்கள் அல்ல!
வேதங்கள்! வேதங்கள்!

அடர்ந்து செறிந்திருக்கும்
அவைகள் செடிகளல்ல!
ஆகமங்கள்! ஆகமங்கள்!

பூத்துக் குலுங்குபவை
பூக்களா அல்ல!
புதுமைகள்! புதுமைகள்!

மூலப் பொருட்குள்ள
மூவியல்பும் அதற்குண்டு!

பேரழகைக் காட்டும்!
பெருவியப்பை ஊட்டும்!
பேரச்சம் ஏற்படுத்தும்!

முத்தமிழைப் போலிங்கே
மூலிகைகள் மணம் கமழும்
சித்தத்தில் அமைதி
சில்லென்று குடியிருக்கும்!

'நான்' கரைய வேண்டுமென்போர்
நாடிவரும் பூமியிது!
ஊன்கரையும்; உளம்கரையும்;
உயிர், பிரம்மம் தனில்கரையும்!

அதுவெறும் காடன்று!
'அன்னை'க்கு, இயற்கை
அன்னை தந்த உயிர்க்கோயில்!

அந்த உயிர்க் கோயிலிலே
அமைந்திருக்கும் கருவறையாய்க்
கொல்லூர் திகழ்கிறது!

விழுதுகளைப் போலே
வீணாகத் தொங்குகின்ற

கைகளே மலைமுகட்டைக்
கண்டவுடன் வணங்குங்கள்!

அன்னை இருக்குமிடம்
அருகேநாம் வந்துவிட்டோம்!

அம்மா மூகாம்பிகையே!
அம்மா என் உயிர்த்துணையே!

அம்மா உனைத்தேடி
ஆயிரங்கல் வந்துவிட்டேன்!

கன்றுவரத் தாய்ப்பசுக்கள்
காணா திருப்பதில்லை!

தாயே! தமிழ்ச்சுவையே!
தகிக்காத கனற்கொழுந்தே!

இரண்டு கரம்நீட்டி
எதிரேநீ வரவேண்டும்!

## சௌபர்ணிகை ஆறு

நீல மலைச் சாரல்—அங்கு
நித்திலப்பூந் தூறல்!—அந்
நித்திலப்பூந் தூறல் எலாம்
நெஞ்சினிக்கும் தேறல்!

வான் மழையில் பொங்கும்—இவ்
வையமதில் ஆறு!—இது
தேன்மழையில் பொங்கும்—ஒரு
தெய்வமணி ஆறு!

பொங்கும் எழிற் கங்கை—அவள்
புனிதமிகும் மங்கை!—அக்
கங்கையினும் தூய—இவள்
காவிரியின் தங்கை!

உச்சிமலை தோன்றி—நம்
உயிர்ப் பிணியைப் போக்கும்—பல
பச்சிலையின் வாசம்!—சௌ
பர்ணையிலே வீசும்!

ஓங்கிவளர் மூங்கில்—இலை
உண்ணவரும் யானை!—பயம்
தேங்குவிழி மந்தி—இங்கு
சிந்தும்மலைத் தேனை!

மூலிகையின் சாறும்—நல்
முக்கனியின் சேறும்—அடர்
சோலைமலர் ஊறும்—தேன்
சுவையுமிங்கு சேரும்!

தென்னை இள நீரும்—சுவைத்
தீங்கரும்பின் சாறும்—வந்து
இந்நதியில் சேறும்—சுவை
இன்னமுதை மீறும்!

சித்திரப்பூ ஆடை—நதி
சூடிவரப் பார்க்கும்—பெரும்
அத்திமரம் நூறு—கனி
ஆயிரங்கள் சிந்தும்!

தன்னைமறந் தாடும்—நதி
தன்னில் எழும் கீதம்—அது
அன்னை யவள் பாதம்—அதில்
அணிசிலம்பின் நாதம்!

உள்ளமெலாம் துள்ள—விழி
உன்னழகை யள்ள—நீ
செல்லுமிடம் எங்கே?—அடி
செப்பியபின் போயேன்!

## தாய் வீடு நோக்கி!

ஆற்றுக்குக் கிழக்கே சாலை!
மரங்களின் அணிவ குப்பு!
காற்றிலும் தெய்வீ கத்தின்
கமழ்மணம்! கடந்து வந்தால்
மேற்றிசை வாசல்! கண்டால்
மேலெலாம் புல்லரிப்பு!
சாற்றுமிவ் வாசல், ஆதி
சங்கரர் புகுந்த வாசல்!

ஆதவன் பகலைச் செய்ய
அன்னையின் ஆணை கேட்கும்
மேதகு கீழை வாசல்
மேவினால், இடது பக்கம்
நாதமே வடிவாம் வள்ளி
நாயகன் கோயில்! அந்த
நாதனைப் பணிந்து மெல்ல
நகர்ந்ததும் காண்ப தென்ன?

கலைமகள் மண்ட பத்தின்
கவினுறு தோற்றம்! பாடும்
கலைஞர்கள், சொல்லில் தீட்டும்
கவிஞர்கள் தங்கள் தங்கள்
விலையிலாப் படைப்பை இந்த
விசித்திர மண்ட பத்தில்
கலைமகள் ஆன தாயின்
கருணைக்கே அர்ப்பணிப்பார்

தென்மேற்கு மூலை! ஆங்கே
    திகழ்வன ஈசன் கோயில்!
தன்மேனி புற்றில் வைத்துத்
    தரணியின் மேன்மைக் காகப்
பொன்மேனி முனிவன், கோலா
    புரிக்குத்தன் பெயரைத் தந்தோன்
முன்மேன்மைத் தவத்தைச் செய்து
    முக்தியைப் பெற்றான் ஆங்கே!

சந்திர மௌலி கோயில்,
    சராசரம் உய்ய நஞ்சை
உண்டவன் கோயில் என்றே
    ஓங்கிடும் இரண்டு கோயில்
அந்தநல் ஆல யங்கள்
    அவற்றுக்கு நடுவே சக்தி
தந்தவோர் மூத்த பிள்ளை
    தனிப்பெருங் கோயில் ஒன்று!

பெண்ணெலாம் அன்னை யென்று
பேணிடும் அனுமன் கோயில்!
கண்ணெலாம் பூக்கள்; அங்கு
கவிதைகள் பிறக்கும் என்று
மண்ணெலாம் போற்றும் எங்கள்
மாயவன் கோயில்! மேலும்
விண்ணவர் வணங்கும் வீர
பத்திரன் வெற்றிக் கோயில்!

எத்தனை பரிவா ரங்கள்
இவரெலாம் அன்னை மீது
பத்தியை வளர்த்த தாலே
பலர்தொழும் நிலையைப் பெற்றார்!
புத்தியைக் கடந்து நிற்கும்
பொற்பதம் காட்டும் எங்கள்
சத்தியின் சந்நிதானம்
இதோ இங்கே உள்ளுக்குள்ளே!

## அன்னை! அன்னை! அன்னை!

காலத்தைக் கடந்த லிங்கம்!
கவின்பெறும் சோதி லிங்கம்!
ஞாலத்தில் தங்கக் கோடு
நடுவிலே அமைந்த லிங்கம்!
மூலத்தின் மூல லிங்கம்!
முப்பெரும் கடவுள் ஒன்றாய்க்
கோலஞ்செய் லிங்கம்! இந்தக்
கோலமா புரியின் லிங்கம்!

இதோவலப் புறத்தில் எங்கள்
    ஈசனின் தோற்றம் மூன்று!
இதோஇங்கு பெரிதாய், லிங்க
    இடப்புறம் அமைந்தி ருக்கும்
இதோ இந்தச் சக்தி மூவர்
    இங்குதான் ஆற்றல்! ஆகா
இதோ இந்த இலிங்கத் தின்பின்
    இருப்பவள் தானா எனதாய்?

அன்னையே இங்கா உள்ளாய்?
    ஆதிசங் கரனார் கண்ட
உன்னையா காண்கின் றேன்நான்?
    உலகத்தைப் பந்தாய்ச் சுற்றும்
கன்னியா? இல்லை என்னைக்
    கருவிலே சுமந்த தாயா?
அன்னையே அன்னை யேயென்
    றழுவதா சிரிப்ப தாநான்?

துள்ளியே வருகு தாற்றல்!
　　தோன்றுதோர் சக்க ரத்தில்!
தள்ளிநான் நிற்க வேண்டும்
　　தாக்குது தனிமின் சாரம்!
புள்ளியாய் அமைந்து கோடிப்
　　புவனமாய் விரிந்து தோன்றும்
கள்ளியே! கன்னித் தாயே!
　　கருணைசெய் தாங்க மாட்டேன்!

சங்கினைக் கண்டேன் காக்கும்
　　சக்கரம் கண்டேன் 'அஞ்சேல்'
என்கிற தாம ரைக்கை
　　எழிலினைக் கண்டேன்! தேவன்
சங்கரன் கண்ட வாறே
　　சாந்தமும் கண்டேன்! அம்மா
திங்களும் கயலும் கண்டேன்!
　　திருநுதல் விழியும் கண்டேன்!

சங்கர பீடம் கண்டேன்!
சந்திர வெள்ளம், நெஞ்சம்
எங்கணும் பாயக் கண்டேன்!
இதயத்தில் இன்பம் கண்டேன்!
இங்குநான் அமர லாமா?
எனக்குள்நான் உருகலாமா?
மங்கலத் தாயே உன்னை
மனதில்நான் தாங்க லாமா?

ஆழ்கடல் ஆழம் காண
அங்கொரு உப்புக் கல்லை
மூழ்கவே சொன்னார் என்றால்
முடியுமா? அதனைப் போலே
தாழ்சடை முனிவன், பின்னர்
சங்கரன் கண்ட சக்தி
ஆழ்கடல் காண என்னால்
ஆகுமா? கரையே போதும்!

## கொல்லும் புரியா? கொல்லா புரியா?

கொல்லும் புரியா? கொல்லா புரியா?
கூறடி சிவசக்தி!—நவ
கோணம் அனைத்திலும் ஆட்சி செலுத்திடும்
குளிர்நில வேசக்தி?
(சக்தி—கொல்லும் புரியா...)

நில்லா உலகில் நிற்கும் பொருளே!
நீதான் சிவசக்தி!—பெரும்
நீலக் கடலின் ஓலத் திரையில்
நெளியும் மின்சக்தி!
(சக்தி—கொல்லும் புரியா...)

காரிருள் வாழ்க்கைக் கடலில் என்மனம்
கலங்குது பார்சக்தி—அதில்
கலங்கரை விளக்கென நீவர வேண்டும்
கண்ணெதி ரேசக்தி!
(சக்தி—கொல்லும் புரியா...)

கனவுக ளாலே ஆக்கிய தேர்க்குக்
கதியெது சொல்சக்தி!—அது
கவலை நெருப்பில் புகையெனப் போகுது
கண்திற பார்சக்தி!
(சக்தி—கொல்லும் புரியா...)

அம்மா! அம்மா! அம்மா! எனவுயிர்
அழுவது பார்சக்தி!—அது
ஆவித் துணையாய் நீவரு வாயென
அழைக்குது பார் சக்தி!
(சக்தி—கொல்லும் புரியா...)

காண்பதும் காணப் படுவதும் நீயே
கருணைமகா சக்தி!—இரு
கண்களுக் குள்ளே காட்சிகள் ஏது
நீ இலையேல் சக்தி!
(சக்தி—கொல்லும் புரியா...)

பெண்ணாய் ஆணாய்ப் பேடாய் அலியாய்ப்
பிறங்கும் உயிர்ச்சக்தி!—ஒரு
பேதமிலாமலே மண்ணுயிர் யாவையும்
காக்கும் அருட்சக்தி!

கொல்லும் புரியா? கொல்லா புரியா?
கூறடி சிவசக்தி—நவ
கோண மனைத்திலும் ஆட்சி செலுத்திடும்
குளிர்நில வேசக்தி!

கூற்றுவனைக் கொலும் என்பதனாலிது
கொல்லும் புரிசக்தி!—உனைக்
கும்பிடு வோரழி வெய்துவ தில்லையால்
கொல்லா புரிசக்தி!

பூமியின் தேவர்கள் மானுட ராகிடப்
புரிநீ அருள்சக்தி!—ஒரு
பொன்னுல கம்வர மண்ணுல கதிடே
புதுவிதி செய்சக்தி!

நீல நிறத்தொரு வானகம் கூரை
நின்மனை யில்சக்தி!—விழி
நீண்டவளே அடர் கானக மேசுவர்
நின்மனை யில்சக்தி!

கோல புரத்தொரு தாமரைத் திருவாய்க்
கோயில்கொளும் சக்தி!—எழில்
கொஞ்சிடும் தென்னகக் கன்னட நாட்டில்
கொலுவிருப் பாய் சக்தி!

மூத்தும் இளையவ ளாக இருக்கும்
முதற்பொருள் நீசக்தி!—தாய்
மூகாம் பிகையே! அகிலாண் டேஸ்வரி
முன்வரு வாய் சக்தி!

## ஆற்றங்கரையில் ஓர் அணுசக்தி உலை

சௌபர்ணை ஆற்றங்கரை—அங்கே, அணு
சக்தி உலையிருக்கும்!
சக்திக் கதிர்வீச்சில்—உலகச்
சக்கரம் சுற்றுதடி!

சத்தியத் தாயடிநீ—சிரிக்கும்
சக்கர பாணியடி!
சக்திப் பெருங்கனலே!—இராமச்
சந்திர சோதியடி!

வெற்றித் திருமகள்நீ!—அடியே
வீரத் திருமகள்நீ!
கற்றுத் துறைபோனார்—தமக்கோ
கல்வித் திருமகள் நீ!

நாத்திகம் பேசுகிறாய்—அடிநீ
நண்பர்கள் உள்ளிருந்து!
ஆத்திகம் பேசுகிறாய்—அடியே
அன்பர்க்குள் வாழ்ந்துகொண்டு!

என்ன முரண்பாடு—அடியே!
ஏய்ப்பதுதான் தொழிலோ?
அன்னை விளையாட்டில்—குழந்தை
ஆவி மயங்காதோ!

நாங்கள் ஒலிபெருக்கி—முழங்கும்
நாதத்தைத் தந்தவள் நீ!
மூங்கில் குழாய்களுக்குள்—அடி, உன்
மூச்சுச் சுழலுதடி!

ஊமைச்சி பெற்ற பிள்ளை—கணத்தில்
ஒன்பது கோடியடி!
ஊமைத் துரை போலே—அவற்றில்
ஒன்றென நான் பிறந்தேன்!

ஊமைச்சி மைந்தனுக்கும்—பேசவோர்
உணர்ச்சி வந்ததடி!
நாமத்துக் கேற்றபடி—அடி, உன்
நாவை அசைக்கவில்லை!

பேசிட மாட்டாயோ?—அடி, என்
பேதைமை தீராதோ?
ஏசிட மாட்டாதோ—உலகம்?
ஏனிந்தச் சோதனையோ?

காற்றுக்குள் கூடுகட்டி—அதிலந்தக்
காற்றை நிரப்பிவிட்டாய்!
காற்று மறைந்தவுடன்—உடலெனும்
கட்டை எரியுதடி!

காலக் கருங்கடலில்—எனக்கோர்
கட்டுமரம் கேட்டேன்!
நீலக் கருங்குயிலே—எனக்கோ
நின்னடி தந்துவிட்டாய்!

மந்திரம் சொல்லிவிடு—மக
மாயி உன் செவ்விதழால்!
தந்திரம் சொல்லிவிடு—அடி, இந்தத்
தாரணி உய்வதற்கே!

## அன்னை பேசுகிறாள்!

உனக்குள்ளே பேசுபவள்
ஊமைகளின் தலைவியடா!
கேட்பவன் நீ யல்ல!

கேட்பவள்யார்? நானன்றோ!
கேள்வியெது நான்! இனிமேல்
கிடைக்கின்ற பதிலும் நான்!

பார்க்கும் பொருளெல்லாம்
பராசக்தி என்பவனே!
கேட்கும் மொழிகளெல்லாம்
யார்மொழிகள் சொல் மகனே!

பகரும் உரைகளெல்லாம்
பைரவியின் பதில்களடா!

வாக்கும் அதை வழங்கும்
வாயும் நான்! என்றன்
நாக்கை அசைத்தேன்
நறுந்தமிழைச் சிந்துகிறாய்!

பேசு மகனே!
பிறர்க்காக நீபேசு!
ஆசு கவிதந்தேன்!
அருள்தந்தேன் இனிப்பாடு!

## மூகாம்பிகையின் கோலம்—ஒன்று

## கலைமகள்

வெண்டா மரைமேலே வெள்ளை நெருப்பைப்போல்
கண்டார்க்குக் கல்வியொரு கற்கண்டாம்!—உண்டா?
இலையா அருளென் றெவர்நினைப்பார்? உண்டா?
இலையா இடை? என்பார் உண்டு.

அழுகும் பொருள் பார்த்தால் அப்பொழுதே வாய்நீர்
ஒழுகும் படியுள்ள நாவில்—பழகும்
பசுந்தமிழின் பாடல் பலநூறு கொட்ட
இசைந்தவளை நெஞ்சே இறைஞ்சு!

வாய்க்குகையில் நாக்கு வளைந்தாடும் நாட்டியத்தில்
தாய்க்குவகை பொங்குவதைத் தான்கண்டேன்—
வேய்க்குநிகர்
தோளுடைய தாயின் துணையிருந்தால் தாள் பணிவார்
வாளுடைய மாமன்னர் வந்து!

ஆறுபத்து நான்குகலை அல்லவே; ஆனகலை
நூறுபத்துக் கோடியெனச் சொன்னாலும்—ஊறுபக்தி
நெஞ்ச மிருந்தால் நிமிடத்தில் கற்றிடலாம்
நஞ்செயலால் ஆமோ நவில்?

நுணித்தறியும் ஆற்றல் நுழைபுலத்தின் சீர்த்தி
தனித்துணரும் ஞானத் தகைமை—அனைத்தும் நாம்
சிந்தித்தால் கிட்டுமோ? செந்நாக் கிழத்தியைச்
சந்தித்தால் தேடிவரும் தாம்!

வெள்ளைக் கமலம் விரும்பிப் புகுவாளென்
உள்ளக் கமலம் உவந்தாளே!—அள்ளக்
குறையாத அன்புக் கொழுங்கொடியின் பாதம்
மறவாத வர்க்கன்றோ மாண்பு!

வாயுனக்குப் பொய்கை; வளைகின்ற நாப்பீடம்
தாயுனக்கு நல்லதோர் தாமரையோ!—மாயனுக்கு
நல்ல மருமகளே! நான்முகனைப் பேசவைக்க
வல்ல கலைமகளே! வா!

கையிலேன் வீணை கலைமகளே என்னுடம்புப்
பையிலோர் வீணையுண்டு பார்த்தாயா?—உய்யும்
இளைய உயிர் வீணை இதைஏந்து! மீட்டு!
பழையதுன் கைவீணை பார்!

இன்னுமேன் புத்தகமோ? என்ன புதியகலை
அன்னைநீ கற்க அவாவுகிறாய்?—இன்னமுதே
மூங்கை கவிபாட, முட்டாள் அறிவுபெறப்
பூங்கரத்தால் நீயருளும் போது!

கொல்லா புரியின் கொலுமன்றில் வந்திருக்கும்
எல்லார்க்கும் ஞானம் இடுபவளே!—கல்லாத
மூளையிலும் வந்துதிக்கும் முன்னேற்றச் சூரியனே!
ஆளுகவே எங்கள் அகம்!

மூகாம் பிகைவடிவே! முத்தமிழின் நூல்களுக்குச்
சாகா வரம்தந்த தற்பரையே!—மாகாளீ!
செல்வத் திருமகளே! தெய்வத் தலைமகளே!
கல்விக் கொருதுணையே கா!

## மூகாம்பிகையின் கோலம் - இரண்டு

## திருமகள்

காக்கும் திருமகளே! கடவுளுக் கேசெல்வம்
ஆக்கும் அலைமகளே! அடிக்கமலம் இறைஞ்சுகிறோம்!
வீட்டுக்கு வந்த குல விளக்கை உன்னுடைய
கூட்டத்தில் ஒருத்தியெனக் கொள்கின்றோம்!
அம்மாஉன்
நாட்டத்தில் தானே இஞ்ஞாலம் சுழல்கிறது!
தேட்டத்தில் தானே திருவந்து பொலிகிறது!

ஓரிடத்து நேற்றிருந்தாய் வேறிடத்தில் இன்றுள்ளாய்!
யாரிடத்தும் நீ நிலையாய் நின்றதில்லை! ஏன் தாயே!
'இரு' என்று சொன்னாலும் இருக்காமல் ஓடிவிடும்
திருமகளே! உனைத்தேடித் திருப்பதிக்கேன்
போகின்றார்?
கணவனுக்குச் சக்கரம் கையிலே இருக்கிறது
உனக்குச் சக்கரம் காலில் இருக்கிறதோ?

மருமகள் இருக்குமிடம் மறந்தும் நினைக்காத
மாமியார் நீ என்று மாநிலமே சொல்கிறது!
அறிவிருக்கும் இடத்தை ஏன் அலட்சியப் படுத்துகிறாய்?
பொருளுக்குப் புல்லரையும் பாடுவதா புலவர்தொழில்?

பணமே—பொருள் வேறு பரம்பொருளே இல்லை எனும்
குணமே குணமாகக் கொள்வதுதான் இவ்வுலகம்
தெய்வம் அமர்கின்ற பீடத்தில் இன்றைக்குப்
பணத்தை அமர்த்துகின்ற பக்திமட்டும் வளர்கிறதே!
அச்சுதனுக் கே, திருவாய் ஆனவளே கோயிலையும்
அச்சிட்ட தாள்தானே ஆள்கிறது இப்போது!

பச்சையாய்ப் பணந்தானே நீஎன்று கருதுகிற
கொச்சை மனிதர்களால் வந்த குழப்பமிது!
அந்தப்பணம்தான் அம்மாநீ என்று சொன்னால்
எந்தக் காலத்தும் எனைப்போல் யார் நாத்திகன்?

மண்களிக்கும் பச்சை வண்ணத்தில், மரகதப்பாய்
கண்களிக்க விரித்திருக்கும் கலையழகில், பனிமலையில்
நீல மலையில் நிறைந்திருக்கும் காடுகளில்
சோலைகளில், கொஞ்சும் சுடர்ப்பூவில், குருத்துகளில்

இரண்டு கரைதழுவி எக்களித்துப் புரண்டோடும்
ஆறுகளில், ஆற்றங் கரையோரப் பெரும்புதரில்,
தாழையில் அதுசிந்தும் தங்கநிறச் சிறு பொடியில்
வாழையில் அது சுமந்து வருந்துகின்ற பழத்தாரில்

கண்ணெட்டும் வரைக்கும் கதைபேசிச் சிரிக்கின்ற
செந்நெற் பயிர்வயலில், சிற்றோடை முணுமுணுப்பில்,
கருக்கிருட்டு வேளையிலே கலப்பையுடன் செல்பவனின்
கருத்துத் திரண்டு காய்த்த பெருந்தோளில்,

நெல்லுக்கு நீர்பாய நெஞ்சினிலே தேன்பாய
உள்ளத்துக் களிப்பை உணர்த்தும் உதடுகளில்,
பண்ணத்தி பாடிப் பறக்கின்ற வண்டுகளில்,
வண்ணத்துப் பூச்சியின் வண்ணவண்ணப் புள்ளிகளில்,

கன்னல் மூங்கிலுடன் போட்டியிடும் விளையாட்டில்,
சின்னஞ் சிறுமியர் வாய் சிந்துகின்ற பொன்னகையில்,
சாலையிலே தார்போடும் தோழர்களின் உயிர்மூச்சில்,
ஆலைத் தொழிலாளர் அருமுழைப்பில், அதன்பயனில்,

வாலிபரின் தோள்வலிவில் வனிதையரின் இடைமெலிவில்
அம்மாநீ இருக்கின்றாய்! அழகுநடம் புரிகின்றாய்!
வல்ல பெருமா ளாய் வாழ்விப் பான் திருமால். அந்
நல்ல பெருமாள் மனையில் நடமாடும் திருமகளே!

எட்டுத் திருவும் ஏழு மலைபோல
தட்டுப் படாமல் தரும்தா மரைச் செல்வி!
தொட்டிலுக்குப் பிள்ளையும் பட்டிக்குப் பாற்பசுவும்
வட்டிலுக்குத் தெள்ளமுதும் வழங்கும் பெரு மாட்டி!

கணவனையும் நம்பாமல் காசினியைக் காப்பதற்குத்
தானே சக்கரத்தை ஏந்தும் தளிர்க்கொடியே!
மூகாம்பிகையே! முறுவலிலே சூரியனைப்
பூக்கவைக்கும் தாயே! பொன்மகளே! வணங்குகிறோம்!

## மூகாம்பிகையின் கோலம் - மூன்று

## காளி

(ஊழிக்கூத்து)

கிழியும் வானும் நிலமும்—கடல்
　　கீழ்மே லாகத் தெரியும்—தீ
வழியும் குன்றம் கரியும்—ஆ!
　　வளியின் தோலும் உரியும்!

உதிரும் மீனும் நிலமும்—கதிர்
　　உதவாக் கரைபோல் அலையும்—கோள்
எதிரும் புதிரும் திரியும்—திசை
　　எட்டும் புகையும் எரியும்!

பாதா ளங்கள் குமுறும்—தலை
　　பன்னீ ராயிரம் உருளும்—கொடும்
வேதா ளங்கள் அலறும்—உடன்
　　விண்ணும் மண்ணும் கதறும்!

வயிரக் குன்றுகள் சிதறும்—நிலம்
　　வலிப்பில் கைகால் உதறும்—சிறு
தயிரைக் கடைவது போலே—புயல்
　　தண்ணீர் வயிற்றைக் கடையும்!

மேகப் பன்றிகள் உருளும்—உடன்
　　மின்னற் பூங்கொடி திரளும்—பெருஞ்
சோகப் பெருவெளி இருளும்—மறை
　　சொல்லிய நான்முகன் வெருளும்!

கூகா என்றது காற்று—அது
குமுறித் திரிந்தது நேற்று—தீ
'ஆகா' என்றது பார்த்து—உடன்
அதுவும் நடுங்குது வேர்த்து!

திக்குத் திகுதிகு வென்றே—செந்
தீநதி ஆயிரம் ஓடும்—பார்
தக்கத் தகதக வானம்—வரை
தணல்அலை வெளியினை மூடும்!

குருதீப் பிரளய வெள்ளம்—அதில்
குதிரைகள் போல்அலை துள்ளும்—வரும்
இறுதிப் புனிலிதைக் கொள்ளும்—படி
எங்கே உள்ளது பள்ளம்?

பேயும் குறளியும் துடிக்கும்—விதி
பிணம் போல் விழுந்துடன் நடிக்கும்—தாய்
பாயும் விழியிதைப் படிக்கும்—கொலை
பாதகன் இருதயம் வெடிக்கும்!

மலைகளும் நதிகளும் எங்கே?—தென்
மாருதம் போனதும் எங்கே?—தளிர்
இலைகளும் மலர்களும் எங்கே?—அவை
இருந்ததும் போனதும் எங்கே?

வானம் பெருஞ்சுடு காடு—கீழ்
வையம் பேரிடு காடு—இடை
காணும் தேவர்கள் கூடு—பார்
கடைசியில் எமன் தலை ஓடு!

திருமால் ஒன்றும் பூணார்—அவர்
திகிரியும் சங்கும் காணார்—சதா
சிவனார் எங்கே போனார்?—இவள்
சீறடித் தொடுதோல் ஆனார் !

அங்கே தெரிபவை என்ன?—ஆ!
ஆயிரம் ஆயிரம் விழிகள்!—ஓ!
இங்கே தெரிபவை என்ன?—அட
இவைகளுமா இவள் விழிகள்?

பெரிதாய்ப் பெரிதாய் வளரும்—விழி
பேருல கெங்கணும் நிறையும்—மிகச்
சிறிதாய் அண்டம் குறையும்—புன்
சிரிப்பினிலே, அது மறையும் !

திக்குத் திகுதிகு திகுதிகு திகுவெனத்
திக்குகள் எழுந்தாட,
திசைதிசை ஓங்கிய களிறுகள் எட்டும்
தீம்தீம் எனவாட,

குக்குக் குகுகுகு குகுகுகு குகுவெனக்
கூளிகள் வெறியாட,
குறையுடல் ஆட, தலை தனி யாட,
கொலைவெறி விழியாட,

தொக்குத் தொகுதொகு தொகுதொகு
தொகுவெனத்
தொல்லுல கேழாட,
தொடைகளில் தட்டித் தொங்கிய நாக்குடன்
குறளிகள் விரைந்தாட,

தக்குத் தகுதகு தகுதகு தகுவென
ஆடுக மாகாளி!
தாய்மூ காம்பிகை மூன்றாம் வடிவே
ஆடுக மாகாளி !

• பட்டப் படபட படபட படவெனப்
 பகல்வான் கிழிபடவும்,
பரிதிக் குதிரைகள் ஆறுடன் ஒன்றும்
 பாரில் மிதிபடவும்,

சட்டச் சடசட சடசட சடவெனச்
 சக்கரம் முறிந்திடவும்,
சதிரிடு கூளிகள் பெருஞ்செவி கிழிபடச்
 சத்தம் எழுந்திடவும்,

வட்டக் கதியினில் சுற்றிச் சுழன்றிடு
 வான்கோள் பொடிபடவும்,
வான்வெளி யதனில் தீபா வளிநாள்
 வயிரவர் பார்த்திடவும்,

மொட்டைப் பெருவெளி எங்கணும் தூள்பட
 முழங்குக மாகாளி !
மூகாம் பிகையின் மூன்றாம் வடிவே
 ஆடுக மாகாளி!

அஞ்சிய தேவர் அரனடி சேர்ந்தனர்
ஆடுக மாகாளி!
அவர்களின் சாம்பலும் தேவை எனச்சொல்லி
ஆடுக மாகாளி!

எஞ்சிய தென்ன? சாம்பல் எனச்சொல்லி
ஆடுக மாகாளி!
எரியுது பாரினும் விரிதிசை எட்டென
ஆடுக மாகாளி!

துஞ்சிய கதிரால் இருளுது உலகென
ஆடுக மாகாளி!
துடியிடை ஆடத் துணை முலை யாட
ஆடுக மாகாளி!

ஆஞ்சுக மே! சிவன் ஆடிடு முன்னர்
ஆடுக மாகாளி!
ஆதி பரம்பொருள் மூகாம்பிகையாய்
ஆடுக மாகாளி!

காற்றும் வானும் நிலமும் இல்லை
    ஆடுக மாகாளி !
கனலும் இல்லை புனலும் இல்லை
    ஆடுக மாகாளி!

நேற்றும் இன்றும் நாளையும் இல்லை
    ஆடுக மாகாளி !
நினைவும் இல்லை கனவும் இல்லை
    ஆடுக மாகாளி !

போற்றலும் நாத்திகர் தூற்றலும் இல்லை
    ஆடுக மாகாளி!
புத்துயிர் பெற்றுப் புவனம் எழும்வரை
    ஆடுக மாகாளி!

கூற்றுவன் இல்லை பிரமனும் இல்லை
    ஆடுக மாகாளி!
கொண்டவன் உன்னைக் கூடுவன் அதுவரை
    ஆடுக மாகாளி!

## அவளே காமாட்சி

(எண்ணல் அலங்காரப்பாடல்)

ஒன்று பரம்பொருள் என்று விளங்கிடும்
உண்மையை உன்னருளால் உணர்ந்தேன்
ஒன்றி விளங்குவதப்பொரு ளோடுஉன்
ஊக்கம தேயென வும்உணர்ந்தேன்!
கொன்று பிழைத்திடு கோழையர் நட்பினைக்
கொண்டிடக் கூசுது என்மனமே!
கன்று துடிக்குது தாய்ப்பசு பால்தரக்
கண்திற காஞ்சியின் நாயகியே !

இருவிழி இருசுடர் எனதுயிர் இருளற
இவைகளில் ஒருசுடர் ஒளிதருமோ !
வருவழி அறிகுவன் செலும்வழி அறிகிலன்
வறியவன் அறிவினில் வழியறியேன்!
தெருவழி திரிதரு துயருறு ஞமலியின்
திரிவது எளியவன் பழவினையோ
கருவழி வருவது கடிவது கடனெனக்
கண்திற காஞ்சியின் நாயகியே !

முப்பொருள் உண்மையை முத்தரின் சொல்வழி
முத்தமி ழின்வழி நானுணர
எப்பொழு துற்றிடும் இன்னருள் எனவுனை
இறைஞ்சுகி றேனடி மாமயிலே!
முப்புரம் எரிசெய முன்னொரு நாளினில்
முறுவல் செயும் சிவன் உட்பொருளே !
கப்பிய காரிருள் காட்டை யழித்திடக்
கண்திற காஞ்சியின் நாயகியே !

நான்கு மறைக்குதி ரைகளைப் பூட்டிய
நாயகன் தேரினி லேவரும்நாள்
ஆங்கு வருஞ்சிவ நாயகி யேயெனக்
கனிச்ச மலர்ப்பதம் தந்தருள்வாய் !
மான்விழி புரள்வது போற்சிறு மனமெனும்
மடையன் மருள்வது காண்கிலையோ
நான்துய ரக்கடல் வீழ்வது வோகொடு
நல்லருள் காஞ்சியின் நாயகியே !

அஞ்சு புலன்களில் ஆவி படிந்திட
ஆரும் எனைக்கடைத் தேற்றவிலை;
நெஞ்சு கலங்குது நிம்மதி போனது
நேற்றுவ ரையுனைத் தேடவில்லை
அஞ்சு மனத்தினில் அன்புத ழைத்திட
அஞ்சுக மேயதில் வந்தமர்வாய்!
செஞ்சுடர் மேனியில் நீல நிறத்தொடு
சேர்ந்திடு காஞ்சியின் நாயகியே !

ஆறு முகத்தவன் ஆனை முகத்தவ
னாயிரு பிள்ளைகள் தோன்றிடவே,
ஏறு சுமப்பவன் வீறு கெடுத்திட
இன்பம ளித்தவ ளேயழகே !
சீறு முகத்தொடு ஏறிய மேதியில்
செவ்விழிப் பந்துகள் உருண்டுவர,
கூறு படுத்திடும் கூற்றுவ னைப்பிடி
கூறுசெய் காஞ்சியின் நாயகியே !

ஏழு சுரங்களில் ஓடி வழிந்திடும்
இன்னிசை யாக இருப்பவளே!
வேழ முகத்தவன் தாயெனும் போதிலும்
விளங்கிடு கன்னியென் றானவளே!
சூழுல கங்களைப் பந்துக ளாய்விரல்
சுற்றி யெறிந்திடு மடமகளே!
ஏழை யெனக்கருள் நல்கிட யாருளர்
இரங்கிடு காஞ்சியின் நாயகியே!

எண்குண நாயகன் இளம்பிறை வானவன்
இமய மடப்பிடிக் கோர்துணைவன்
எங்களுக் கேயருள் நல்கிடும் முன்னரே
இன்ப வளந்தரு மாமழையே!
பெண்களின் குங்கும நெற்றியி லேகுளிர்
பிந்தெனத் தத்துவம் ஆனவளே!
கனகளி லேஒளி ஆகிய காரிகை
தலைவளர் காஞ்சியின் நாயகியே!

ஒன்பது கோணம் அனைத்திலும் மேவிட
ஒளிவடி வாகிடும் உமையவளே!
தின்பது போவது சாவது வாகவே
திரிகிற மானுட வாழ்க்கையிலே
மன்பதைக் கோர்பயன் செய்வதும் எவ்வழி?
மாள்வது வோவிதி மலைமகளே!
அன்பெனுங் கோயிலில் அறிவெனும் உருவுடன்
ஆண்டிடுங் காஞ்சியின் நாயகியே!

பத்து விரல்களில் மோதிரம் ஒளிவிடப்
பாடகம் தண்டைகள் ஒலிபுரிய,
குத்து விளக்குகள் ஓர்பதி னாயிரம்
கோயிலை வானகம் ஆக்கிவிட,
வித்தகர் தமிழ்மறை கற்றவர் சூழ்தர
வீணைமுதற்குழல் இசைபொழிய
மத்தளங் கொட்டிடச் சங்கு முழங்கிடு
மாநகர் காஞ்சியின் நாயகியே!

## அவளே மீனாட்சி

கற்றாருரை மணமேகமழ் கவினார்திரு நிலமே
பொற்றாமரைக் குளமே ஒரு புதிராகிய தலமே
முற்றாமுலை இளமாதர்கள் முறையாய்த்
தொழுதேத்தும்
நற்றாயவள் அருளோங்கிய நகரம் பெயர் மதுரை!

பண்டாயிரம் மறை 'ஓ'வெனப் பலபாடியும் அறியா
எண்டோளினன் சிவநாயகன் இருந்தோங்கிய படியால்
கண்டாருளம் கனிகின்றதும் கமழ்கின்றதும் கண்டு
வண்டாயிரம் தமிழ்பாடிடும் நகரந்திரு மதுரை!

அங்கங்களில் எங்கும் மணம் வீசும் பசு மஞ்சள்!
பொங்குங்களி இளமங்கையர் முகமாயிரம் திங்கள்!
சங்கங்களில் பெண்பாவலர் சிந்தும் புதுச் சந்தம்!
எங்கெங்கிலும் மணமேகமழ் இதுதான் திருமதுரை!

வையந்தனில் பேராறுகள் வளர்க்கும்பயிர் உண்ண!
வையைநதி மங்கையிவள் வளர்க்கும் பயிர் என்ன?
உய்யும்படி ஊட்டும்நதீ ஓங்கும்பயிர் தமிழே!
தெய்வத்தமிழ் நகரம் பெயர் திருமாநகர் மதுரை!

நீலக்கடல் அருகேயிது நிற்கும்நகர் அன்று!
ஆழக்கடல் அஞ்சும்இதன் அறிவுக்கடல் கண்டு!
வாழைக்கடல் செந்நெற்கடல் கன்னற்கடல் என்று
கோலக்கடல் சுற்றும்படி கூடல்நகர் உண்டு!

கச்சிப்பதி தனிலும்வட காசிப்பதி தனிலும்
உச்சிப்பதி என்னும்படி ஓங்கும்பதி மதுரை!
மெச்சத்தகும் இதையாள்பவள் மீனக்கொடி அரசி
பச்சைக்கிளி தனைஏந்திய பரமன்கிளி ஆவாள்!

சேலாம்படி நீளும்விழி செகமெங்கிலும் செல்லும்!
நூலாம்படி திகழும்கொடி இடை மின்னலை வெல்லும்!
பாலாம்பனி மொழியேழ்வினைப் பகையாவையும்
கொல்லும்:
நீலாம்பரி ராகந்தனில் நினைப்பாடிய பொழுதே!

திருவாசகம் மணிவாசகர் திருநூலிலை! உன்வாய்
வருவாசகம் எனவே ஒரு தனிவாசகம் தருவாய்!
கருவாசனை வருமோகிளி கரமேந்திய உன்மேல்
ஒருவாசகம் தினம் மோகன இசைபாடிடத் தாயே!

வேம்பேந்திய தமிழ்மாறனின் விழியாகிய மகளே!
பாம்பேந்திய மஞ்சந்துயில் பரந்தாமனின் தங்காய்!
சாம்போதிலும் பயமேயிலை! சரண்நீஎன ஒருநாள்
காம்போதியில் மனமேங்கியோர் கவிபாடிடத் தாயே!

பொன்னுந்தரும் பொருளுந்தரும் புகழுந்தரும் உன்கண்
பண்ணுந்தரும் பரதந்தரும் பலவுந்தரும் அம்மா!
விண்ணுந்தரும் மண்ணுந்தரும் வீரந்தரும் ஞானக்
கண்ணுந்தரும் கல்யாணியில் கவிபாடிடத் தாயே!

நீயேபுவி நீயே வளி நீயே! புனல் தாயே!
நீயே வெளி நீயே அனல் நீயே இறை மாயே!
நீயேதுணை நீயேதுணை நீயேதுணை அம்மா!
தாயே மலை மகளே தமிழ்த் தலமோங்கிய சுடரே!

## அவளே விசாலாட்சி

வெள்ளிப் பனிமலை துள்ளிக் குதித்திடும்
வேகந திக்கரை ஓரம்—பிணம்
வேகும்ந திக்கரை ஓரம்—அந்தக்
கள்ளச் சிறுக்கியின் கண்மலர் ஆயிரம்
பூத்துக் குலுங்கிடப் பாரும்!—உடன்
பார்த்துக் களித்திட வாரும்!

மங்கை உனக்கிந்த மாநில மேபெருங்
கோவிலென் றாகிய போது—எங்கள்
ஆவியில் ஒன்றிய போது—அந்தக்
கங்கை நதிக்கரை ஓரத்தைத் தேடிய
காரணம் என்னடி மாது?—அன்ன
பூரணி யேஅதை ஓது!

ஆசைக் கணவனின் காதற் கிழத்திபால்
அச்சத்தில் அங்கிருந்தாயோ?—அவள்
பக்கத்தில் நீயிருந்தாயோ?—ஆண்கள்
மோசத்தில் வல்லவர் மோகத்தி னாலென்று
காட்டிட அங்கிருந் தாயோ?—வேவு
பார்த்திடத் தங்கிவிட் டாயோ?

நூற்றெட்டுக் கோடிகள் அண்டங்களைத் தந்த
நுண்ணிடை நீஉண வீட்ட—அதை
எண்ணிலா வாய்களில் ஊட்ட—சிவன்
சோற்றுக்கு வீதியில் சோர்ந்து நடந்திடச்
சொன்னவர் யாரடி தாயே!—அதை
என்னிடம் சொல்லிடுவாயே!

வட்ட விழிக்கடல் ஆழத்தைக் கண்டவர்
வாழ்வைத் துறந்திட்டுப் போனார்!—அதில்
மூழ்கிச் சவம்என ஆனார்!—அந்த
நெற்றி விழிச்சிவன் நின்விழி வீச்சினால்
ஞானக் கிறுக்காகிப் போனார்!—ஒரு
மோனத்தி லேசிலை ஆனார்!

கட்டுடல் மங்கையைத் தொட்டுக் களித்திடும்
காமச் சுரம்வந்த போதும்!—உன்
நாமத்தை என்மனம் ஓதும்!—மின்
வெட்டிடும் நேரத்தில் வெண்ணிறப் பூமழை
கொட்டிடும் அக்கணப் போதும்—சிந்தை
முற்றிலும் உன்பெயர் மோதும்!

கள்ளக் குறத்தியின் ஞானச் சிறுபயல்
கார்த்திகைப் பெண்கள்பால் ஊட்ட—அலை
ஆர்த்திடும் பொய்கை தாலாட்ட—அன்று
மெல்லத் துயின்றபின் மீசை வளர்ந்ததும்
மெல்லிடை வள்ளியை வேட்ட—கதை
சொல்லுவன் ஒருண்மை நாட்ட!

கள்ளக் குறத்திக்குக் காட்டுக் குறத்தியே
மாட்டுப்பெண் ஆகிட வேண்டும்!—குகன்
வீட்டுப்பெண் ஆகிட வேண்டும்!—மாமி
துள்ளிக் குதித்திடும் வேளையில் வேடச்சி
சொற்சிலம் பாடிட வேண்டும்!—பதில்
அர்ச்சனை செய்திட வேண்டும்!

அண்டத்தில் உள்ளவை அத்தனை யுஞ்சிறு
பிண்டத்தில் வைத்திடும் தாயே!—நஞ்சுக்
கண்டத்து நாதனுன் சேயே!—தீக்
குண்டத்தில் ஊற்றிடும் தீஞ்சுவை நெய்யுண்டு
மண்டி வளர்ந்திடு வாயே!—அந்த
முண்டக மாலினி நீயே!

காசினிக் கேபெரும் நாயகன் உன்னைத்தன்
கட்டுடல் பாதியில் கோத்தான்—எனும்
கட்டுரை நானொப்ப மாட்டேன்!—நீ
ஈசனுக் கேவலப் பாகத்தைத் தந்தவள்
என்பதைக் கண்டவன் நானே!—இதை
மன்பதைக் கேசொல்லு வேனே!

ஆருடற் பாதியில் யாரிருப் பாரென
யாருக்கு யார்சொல்லக் கூடும்!—அந்தப்
போரினில் யார் வெல்லக்கூடும்!—இந்தப்
பாரினில் அன்னைக்குப் பாகத்தைத் தந்தவன்
ஆண்மகன் என்று சொல்லாதீர்!—அந்த
வீண்சண்டை நீர்வளர்க் காதீர்!

நான்முகப் பையனின் நாட்டியப் பொம்மைகள்
நாற்றிசை வாழ்ந்திடும் மாக்கள்!—கால
ஆற்றில் மிதக்கின்ற பூக்கள்!—நீல
வான்முகம் பார்த்திடும் பச்சைநிறப் பயிர்
போன்றவர் தானடி நாங்கள்—காக்கும்
ஈன்றவள் உன்விழி மீன்கள்!

அத்திப் பழத்தினில் மொய்த்து வளர்ந்திடும்
அற்பக் கொசுக்களைப் போலே—பழங்
குப்பைப் புழுக்களைப் போலே—எண்ணி
எத்திப் பிழைப்பவர் ஏழெட்டு மாடியில்
ஏங்குவோர் சாக்கடை ஓரம்!—நிலை
நீங்குதல் தானெந்த நேரம்!

சொர்க்கத்தைத் தேடியோ மோட்சத்தை நாடியோ
மீட்டவில்லை நாங்கள் யாழை!—நீ
மாற்ற வேண்டும் எங்கள் ஊழை—ஒரு
வர்க்கப் புரட்சிக்கு நாளைக் குறிக்கின்ற
வண்ணத்தில் கண்விழிப்பாயா?—இந்த
மண்ணுக்குள் விண்படைப்பாயா?

ஊக்கத்தைத் தந்திடு ஊழைச் சிதைத்திடும்
உள்ளத்தைத் தந்திடு தாயே!—அருள்
வெள்ளத்தைப் பாய்ச்சிடு மாயே!—கவி
ஆக்கத் துடிப்பவர் நாக்கைத் திருத்திநீ
அன்புடன் நெஞ்சுக்குள் தோன்று!—நாங்கள்
கண்டிடுவோம் விழி மூன்று!

## அவள் சேரியிலே மாரி

மேற்குவானில் மேகம்வந்து படையெடுக்குதே!—வெளி
மேஞ்சுவரும் மாட்டின்நடை வேகமாகுதே!
நேற்றுமுதல் சூரியனைக் காணவில்லையே!—ஏதோ
நெனைச்சபடி காத்துகூடச் சுழன்றுவீசுதே!

சேரியிலே வேப்பமரம் சாமியாடுதே!—பன்றி
சேற்றைவிட்டு வீதியெல்லாம் ஓடப்பாக்குதே!
மாரியம்மன் கோயில்கதவு திறந்தடைக்குதே!—சின்ன
மாடத்திலே தீபம்சிறு நடனமாடுதே!

சாணத்திலே சந்நிதியை மெழுகிவைச்சோமே!—அம்மா
சாயங்காலம் பொடியெடுத்துக் கோலமிட்டோமே!
ஏனத்திலே மாவிளக்கை எடுத்துவந்தோமே!—நாங்க
என்னகுறை செஞ்சோமிப்பப் புயலுவீசுதே?

வானத்திலே மாட்டுவண்டி யாரு ஓட்டுறார்?—அந்த
வண்டிஓட மின்னல்சாட்டை யாருவீசுறார்?
ஏனிப்படிக் காத்துப்பையன் கூச்சல் போடுறான்?—அவன்
ஏழைவீட்டுக் கதவைத்தூக்கி ஆட்டமாடுறான்?

தென்னைமர ஓலையிலே போட்டது கூரை—அது
திடீரென்று கருடன்போல சுத்துது ஊரை!
மண்ணுமதில் கரையுதம்மா மனம்கரையாதா?—எங்க
மாரித்தாயி நெஞ்சுக்குள்ளே அருள்கிடையாதா?

சின்னவாய்க்கால் கரையோரம் எருமைமேய்ச்சவன்—
எங்க
சின்னசாமி இன்னும்வீடு வந்துசேரலை!
புன்னைமரம் புளியமரம் சாயுற போது—அந்தப்
புள்ளையங்கே நிற்காமல் காக்கணும் ஆத்தா!

'வானம்பார்த்த பூமிக்காகக் கண்திற தாயே!'—என்று
வாஸ்த்தவமா போனமாசம் வேண்டிக்
கொண்டோமே!
வானமிப்போ கிழிஞ்சது போல் ஊத்துதே தாயே!—
எங்க
வாசலிலே பாருநூறு வைகையோடுதே!

மாரிஎன்றால் மழைபொழியும் சொல்லுது பூமி!—பேய்
மழையைத்தந்தால் என்னசெய்வம் காக்கணும்
சாமி!
சேரிமக்கள் அடிவயிற்றில் குளிருது ஆத்தா!—அது
சீக்கிரமா மாறும்கண்ணைத் திறந்துநீ பார்த்தால்!

பெரியசாமி மாரிமுத்து ஓடிவாங்கடா!—நம்மைப்
பெத்ததாயி அருளினாலே பிழைச்சுட்டோமடா!
கருப்பசாமி வீட்டுப்பக்கம் நடப்பது யாரு?—என்
கண்ணுமணி சின்னசாமி வருவதைப் பாரு!

காலைவரை காக்கவேண்டாம் ஏரைப்பூட்டுங்க!—நம்ம
கருணைமாரி கண்திறந்தாள் மாட்டை ஓட்டுங்க!
சாலைமலைக் கரட்டுப்பக்கம் வண்டி ஓட்டுங்க!—அங்கே
சாய்ஞ்சமரம் வெறகுக்காகும் வெட்டி ஏத்துங்க!

சமையல்கூட ஊருக்கெல்லாம் பொதுவிலேசெய்வோம்!
—நாங்க
சகல கலா வல்லவராய் ஆகவும் போறோம்!
இமைதிறந்து விட்டதடா தூங்கிடுவோமா?—இனி
ஏய்ப்பவனை முதுகுமேலே தாங்கிடுவோமா?

கருத்தவானம் கிழக்குப்பக்கம் சிவக்கப் போகுது!—மாரி
கண்திறந்தாள் விடிவுகாலம் பிறக்கப் போகுது!
வறுத்த விதை கூட இங்கே முளைக்கப் போகுது—சேரி
வாழ்க்கையிலே புதியசொர்க்கம் திறக்கப்போகுது!

எங்கவிதி எழுதுறவன் எவனுமில்லேடா!—நாங்க
ஏங்கவிதி செய்யுறவன் கடவுளில்லேடா!
உங்கவிதி உங்க கையில் என்று சொன்னாளே—அந்த
ஒருத்திதுணை இருப்பதாலே உலகை வெல்லுவோம்!

அவள் அன்னை வடிவமடா
ஆதிபராசக்தி தேவியடா!

செங்கதிர்ப் பந்துக்குள் செக்கச் செவேலெனத்
தீயை வளர்ப்பவளை—எட்டுத்
திக்கும் அளப்பவளை—ஒளி
பொங்கும் வெள்ளத்தினைப் போகவிட் டேஅதில்
பூமி நனைப்பவளை—இருள்
போக்க நினைப்பவளை,

நீருண்ட மேகத்தை மோதவிட்டேஒலி
நித்தமும் செய்பவளை—மின்னல்
நேர்த்தியாய் நெய்பவளை—அந்த
நார்கொண்டு வானப்பூ நான்குநூ றாயிரம்
நாளும் தொடுப்பவளை—வான
நங்கைக் களிப்பவளை,

வெட்ட வெளியினை ஆடையு டுத்திடும்
வித்தை அறிந்தவளை—அருள்
விந்தை புரிந்தவளை—வானில்
கொட்டி முழக்கிடும் கொண்டல்மு ழக்கத்தில்
கூத்திடக் கற்றவளை—நமைக்
கூவி அழைப்பவளை,

மேகக் குழந்தைக்குப் பாலைத்த ரக்கடல்
மேனியெடுத்தவளை—அலை
மேட்டைக் கொடுத்தவளை—இந்த
மோகக் கழுதைக்குப் போதை எழக்கனல்
மூட்டி வெடிப்பவளை—எமை
ஆட்டிப் படைப்பவளை,

அங்கொரு பார்வையில் குஞ்சு பொறித்திடும்
அற்புதம் செய்தவளை—மீன்
அட்சம் படைத்தவளை—கூடல்
அங்கயற் கண்ணியாய் அண்டச ராசரம்
ஆக்கிக் கொடுத்தவளை—மீன்
ஆட்சி படைத்தவளை,

நாத்திக நண்பர்கள் நாக்குச் சுழற்சியில்
நாட்டியம் காண்பவளை—சொல்
நர்த்தனம் செய்பவளை—பழஞ்
சாத்திரப் பண்டிதர் சாற்றிய தத்துவச்
சண்டை ரசிப்பவளை—கண்டு
சற்று நகைப்பவளை,

கட்டற்ற வான்வெளி நீல நிறத்தினில்
காணக் கிடைப்பவளை—விழி
பூணக் கிடைப்பவளை—இரத்தம்
சொட்டிய நாக்கொன்று தொங்கக் கபாலங்கள்
சூடிக் களிப்பவளை—வெறி
ஆடிக் களிப்பவளை,

சங்கரன் வீட்டினில் காளையைப் பார்வையில்
சாய்த்து முடிப்பவளை—அந்தச்
சாவில் நடிப்பவளை—எம
கிங்கரர் வீட்டினில் நின்ற எருமைக்குத்
தேதி குறிப்பவளை—ரத்தச்
சேற்றில் மிதிப்பவளை,

அன்னை அன்னையென ஆயிரம் வேதங்கள்
ஆரைப் பணிந்திடுமோ—நெஞ்
சாரப் புகழ்ந்திடுமோ,—அந்தக்
கன்னியைத் தாயென்று சொல்லித் துதிக்கையில்
கள்ளின் வெறிபிறக்கும்—என்
உள்ளங் கிறுகிறுக்கும்!

பாரடி பாரடி காலனும் உன் விழி
பார்த்துக் கலங்குகிறான்—உடல்
வேர்த்து நடுங்குகின்றான்—உன்
சீறடித் தாமரை பட்ட இடத்திலும்
சென்றிட அஞ்சுகிறான்—அருள்
செய்யெனக் கெஞ்சுகிறான்!

தக்கத் திமித்திமி தானத்தையோ—எனத்
தாளத்தைப் போடுகிறாய்—அம்மா
தாண்டவ மாடுகிறாய்—என்
சித்தத்தி லேகவி செப்பிச் சிரித்து நீ
செந்தமிழ் பாடுகிறாய்—கேட்கும்
சிந்தையில் ஆடுகிறாய்!

கன்னங் கரேலென வந்த இருட்டினில்
காட்சி கொடுப்பவளே! மாயக்
கட்டை அறுப்பவளே!—ஒரு
தன்னந்தனிக்கருப்பையிலே அண்டத்தைத்
தாங்கிச் சுமப்பவளே; உனைத்
தாயென்று போற்றுகிறோம்!

## மூகாம்பிகையே! முழுநிலவே !

மூகாம் பிகையே முழுநிலவே!
　　மூவுல குந்தொழும் பரம்பொருளே!
மூகாம் பிகையே முதற்பொருளே!
　　மூவா நலந்தரும் திருவருளே!

சாகா நிலைதரும் தத்துவமே!
　　சகல கலாமயில் வித்தகமே!
யோகாம் பிகையே! நித்தியமே!
　　யோகியர்க் கொருமறைப் புத்தகமே!

மூலக் கனலே! முதற்கதிரே!
　　முதல்முடி வில்லாப் பெரும்புதிரே!
காலப் புனலே! கவிமழையே!
　　கரையெது மில்லாப் பெருங்கடலே!

சத்தியத் தாயே உயிர்நிதியே!
　　சங்கரர் பாடிய அருள்நதியே
முத்தியைத் தருகிற சிவகதியே!
　　முனிவர்கள் காண்கிற முழுமதியே!

கண்வாள் ஏந்திய இளம்பிடியே!
　　கண்ணுதல் ஏந்திய திருவடியே!
பொன்வாள் ஏந்திய பூங்கொடியே!
　　பொன்மனச் செம்மலின் மணிமுடியே !

மங்கல நாயகி! காமாட்சி!
மனையறங் காக்கும் சிவகாமி!
அங்கயற் கண்ணி அபிராமி!
அருட்கரு மாரி! மாகாளி!

நீலி! பயங்கரி! ஓங்காரி!
நீலத யாட்சி! கௌமாரி!
சூலி! நிரந்தரி! திரிசூலி!
சுந்தரி! அந்தரி! பகவதியே!

கௌரி! மனோகரி! காந்திமதி!
கற்பக வல்லி! கலைவாணி!
செய்யவள்! வைஷ்ணவி! ஸ்ரீதேவி!
சியாமளி! திரிபுர சுந்தரியே!

மாயி! மனோன்மணி! மாதங்கி
மாலினி! துர்க்கா! முக்கண்ணி!
ஆயி! பரஞ்சுடர்! பூரணி நீ!
அம்பிகை யேமூ காம்பிகையே!

தாய்க்கிது பிள்ளையின் தாலாட்டு!
தமிழினில் மங்கல நீராட்டு!
பூக்கிற பூக்களின் புகழ்ப்பாட்டு!
பூவிழி உனக்கிது விளையாட்டு!

அம்மா! சக்கர நாயகியே!
அனைவரும் வாழ அருள் புரியே!
அம்மா! தாயே! துணைநீயே!
அம்பிகை யேமூ காம்பிகையே!

